# நாட்டுப்புறப் பாலியல் கதைகள்

கி. ராஜநாராயணன்
கழனியூரன்

விலையிலை...
தயாரிப்பாளர்கள்...
மட்டும் தனியாக தரமா...

இந்த ஜெராக்ஸ் வராத கா...
ஞாபகத்துக்கு வருது இப்போ எனக்கு.

பைரன் என்ற ஆங்கிலக் கவிஞன் எழுதிய எம்மாவின் கடிதம் ("எம்மாஸ் லெட்டர்") என்று ஒரு தட்டச்சுச் சுருள் ஆங்கிலத்தில் அந்தக் காலத்தில் நம்ம படிப்பாளிக மத்தியில்

---

1 உல்டா   மாறகம் மாறுபாடு. மாற்றி அமைத்தல்.

**நாட்டுப்புறப் பாலியல் கதைகள்**

கி. ராஜநாராயணன்
கழனியூரன்

முதற் பதிப்பு:
ஆகஸ்டு, 1994

வெளியீடு:
நீலக்குயில்,
சைதாப்பேட்டை,
சென்னை -15

உள் ஓவியங்கள்:
ட்ராட்ஸ்கி மருது

ஒளி அச்சுக்கோர்வை:
பாண்டியன் கணினி, மதுரை

அச்சாக்கம் :
சங்கர் - மதுரை

# முன்னுரையாக . . . .



தமிழில் உள்ள நாட்டுப்புறப் பாலியல் கதைகளைத் தொடர்ந்து புத்தகங்களாகக் கொண்டுவருவது என்ற நடைமுறையில் இது ரெண்டாவது. (முதல்த்தொகுப்பு "வயதுவந்தவர்களுக்கு மட்டும்" என்ற பெயரில் வந்தது) ரொம்ப ரொம்ப யோசித்துக் கொண்டே இருக்காமல் துணிவாக அதைப் புத்தகமாகக் கொண்டு வந்தவர்கள் 'நீலக்குயில், சென்னை- 15" காரர்கள். அட்லஸ் நோட்டு சைஸில்(!), ஓவியர் ட்ராட்ஸ்கி மருது அவர்களின் வரைபடங்களோடு அட்டகாசமாய் வந்தது அப்புத்தகம்; சிறப்பாகத் தயாரிக்க வேணும் என்ற நோக்கில். ஆனாப் பாருங்கள், எதிர்பார்த்தபடி விற்பனை போகவில்லை! ரொம்.....ப ஏமாத்தம் நீலக்குயில்க் காரர்களுக்கு.

ஒரு பாலியல்கதைகள் புத்தகம் சரியாக விற்பனை ஆகவில்லை என்று எங்காவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா. ஆனால் உண்மை. வாசகர்கள் வெறுத்துப்போய் சாமியார்கள் ஆகிவிட்டார்களா என்று நினைக்கவேண்டாம். சாமியார்கள் ஆனால்கூடப் பரவாயில்லை; கீமியார்கள் ( உல்டாப் பேர்வழிகள்! ) 1 ஆகியிருக்கிறார்கள் என்று தெரியவந்தது விசாரித்ததில்

நம்ம ஆட்கள் எப்பவுமெ சமர்த்தர்கள்தான்; சும்மா சொல்லக் கூடாது. ஒரு புத்தகத்தை விலை கொடுத்து வாங்க வேண்டியது.; உடனே ஒன்பது பேர் ஜெராக்ஸ் பண்ணிக் கொள்ள வேண்டியது. புத்தக விலையைவிடக் குறைவு என்பதால்.

ஜெராக்ஸ் செய்தாலும் கட்டுப்படியாகாது என்கிற விலையில்தான் இனிமேல் வெளியிடணும் புத்தகத் தயாரிப்பாளர்கள். ( நூலகப்பதிப்பு என்று நூலகங்களுக்காக மட்டும் தனியாக தரமாக தயாரிக்க வேண்டியதிருக்கும் )

இந்த ஜெராக்ஸ் வராத காலத்தில் நடந்த சங்கதி ஒன்று ஞாபகத்துக்கு வருது இப்போ எனக்கு.

பைரன் என்ற ஆங்கிலக் கவிஞன் எழுதிய எம்மாவின் கடிதம் ("எம்மாஸ் லெட்டர்") என்று ஒரு தட்டச்சுச் சுருள் ஆங்கிலத்தில் அந்தக் காலத்தில் நம்ம படிப்பாளிக மத்தியில்

---

1 உல்டா மாறகம் மாறுபாடு. மாற்றி அமைத்தல்.

புழக்கத்தில் இருந்தது; நான் சின்ன வயசில் பார்த்தது. அப்போ நான் ஏழாவதோ எட்டாவதோ படித்துக் கொண்டிருந்தேன். இடைசெவலில் எங்கள் பள்ளிக் கூடத்திற்கு வந்த டிரில் மாஸ்டர் அதை வைத்திருந்தார். அதுக்குப்பிறகு கோவில் பட்டியிலுள்ள டிரில் மாஸ்டரும் வைத்துக் கொண்டிருந்தார். ( பைரன் என்ற பேரில் டிரில் மாஸ்டர்களுக்கு ரொம்ப இஷ்டம் என்று தெரிகிறது! )

அந்த "எம்மாஸ்லெட்டட"ரை யார் வாங்கிக் கொண்டு போனாலும், அவர்கள் படித்து முடித்ததும் செய்கிற முதல் காரியம் அதை அப்படியே டைப்செய்து ஒரு நகல் எடுத்துக் கொண்டுதான் திருப்பித்தருவார்கள்! போகும் இடமெல்லாம் இந்த எம்மாஸ் லெட்டர் ஒரு குட்டி போட்டு விட்டுத்தான் திரும்பிவரும்.

அதில் அப்படி என்னதான் இருக்குமோ என்ற ஆவல் எனக்கு. ஒருநாள் அது என் கையிலும் வந்து சிக்கியது. நானும் ஒரு தட்டச்சு நகல் எடுத்து வைத்துக் கொண்டேன்!

மெட்ராஸிலிருந்து ஒரு நாள் கு.அழகிரிசாமி வந்திருந்தான். (அப்பொ அவன் "பிரசண்ட விகடன்" இணை ஆசிரியராக இருந்தான்). அதை எடுத்து மெல்ல அவனிடம் நீட்டினேன்.

"ஏ பாவி, ஒனக்கிது எப்பிடிக் கெடச்சது! நாங் கோயில் பட்டியில் படிச்சிட்டிருந்தப்பொ எங்க டிரில் மாஸ்டர்கிட்டேயிருந்தது; பாத்திருக்கெம்" . என்று சொல்லிக்கொண்டே அதன் பக்கங்களை நோட்டம் விட்டு, கொஞ்சம் மனசுக்குள்ளேயே படித்துப் பார்த்து விட்டு சட்டென்று திறந்திருக்கும் வாசக்கதவைப் பார்த்தான் யாராவது வருகிறார்களா என்று. "அந்தக் கதவ மூடிட்டு வந்து இப்படி உக்காரு" என்றான்.

மொழி பெயர்த்துச் சொல்வதற்கு முன்னால் பைரனைப் பற்றிக் கொஞ்சம் விவரித்துவிட்டு, எம்மாவின் கடிதத்துக்கும் ஒரு முன்னுரை சொன்னான்.

"எம்மாங்கிற பொண்ணு, பெண்கள் கல்லூரியின் தங்கும் விடுதியில் தன்னோட தோழியோட தங்கிப் படிக்கிறா. அவர்கள் ரெண்டு பேரும் ரொம்ப நெருக்கம். படிப்பு முடிஞ்சி பிரியும்போது அவர்களுக்குள்ளெ ஒரு ஒப்பந்தம். நமக்கு யாருக்கு முதல்லெ கல்யாணம் ஆகுதொ அவங்க தங்களோட முதல் இரவை-நடந்ததை அப்படியே, ஒளிக்காம மறைக்காம கடிதத்துல எழுதி அனுப்பணும்" ங்கிறது.

முதல்லெ எம்மாவுக்குத்தான் கலியாணம் ஆகுது. அதுபடியே அவளுடைய தோழிக்கு எழுதுன கடிதம் இது.

இப்பொ, கடிதத்தெப் பாப்பம்" என்று சொல்லிவிட்டு படித்துப்படித்து வரிக்குவரி "தாப்பிலியம்" (அர்த்தம்) சொல்ல ஆரம்பித்தான்.

எம்மாவின் அனுபவங்கள் அப்படி ஒன்றும் புதுசாகத் தெரியலை எனக்கு; ஒரு பெண் சொல்கிறாள் என்பதைத் தவிர. ஓரிடத்தில் எம்மா, "ஆணாசையைத் தீர்த்துக் கொள்ள நாம் ஸ்பூனின் முதுகுப் பகுதியை ..." என்று வரும் இடத்தில் எனக்குத் திகைப்பாக இருந்தது.

ஒரு விஷயம் இப்போ நல்லா ஞாபகத்தில் இருக்கிறது! டிரில் மாஸ்டர் அதை இங்கிலீஷில் அப்படியே தனது சக வாத்தியார் ஒருத்தருக்கு வாசித்துக் காட்டிய போது அவர்முகம் போன போக்கு! நான் சின்னப் பையன் என்பதால் என்னை அவர்கள் லட்சியம் செய்ய வில்லை; அதோடு பரங்கி மொழி தெரியாதே எனக்கு; அந்தத் தைரியம்.

கேட்டுக்கொண்டிருந்தவர் பரம வைதீகர். பழுத்த சனாதனி. இப்படியான விஷயங்களைப் படிக்கவும் கேட்கவும் பேயாய் அலையக் கூடியவர். எனது பள்ளிப் படிப்பு இல்லை என்று ஆன பிறகும் கூட அவர் எங்கள் ஊரில் ரொம்ப நாள் இருந்தார். இப்படியான விஷயங்களை அவர் தீராத ஆவலுடன், கேட்டுவிட்டு, அல்லது இப்படியான புத்தகங்களைத் தேடித்தேடிக் கேட்டு வாங்கிப் போய் படித்துவிட்டு வந்து பலமாகக் கண்டித்துப் பேசுவார்!

ஓடிஓடி ஓசியில் வாங்கிப் படிக்க வேண்டியது; அப்புறம் அதை வேகமாகக் கண்டித்துப் பேச வேண்டியது. இதை அவர் ஒரு தொழிலாகவே வைத்துக் கொண்டிருந்தார்.

தோழர். பி. எஸ். இவர்களைப்பற்றிச் சொன்னது ஞாபகத்துக்கு வருகிறது. ஒரு அசிங்கத்தில் ஒருவர் மிதித்துவிட்டார். செய்ய வேண்டியதென்ன; காலை அழுத்தித் தேய்த்து கழுவிவிட்டு நிம்மதியாக இருக்கலாம். அப்படிச் செய்யவில்லையாம். கழுவாமல், அதைத் தொட்டு, தொட்டு மோந்து பார்த்துக் கொண்டே செ, சை என்று சொல்லிக் கொண்டே இருந்தாராம். தனக்கு அதில் விருப்பம் இருக்கிறது; மற்றவர்களுக்காக அதை வெறுப்பதுபோலப் பேசும் ஒரு பாசாங்கு.

கவிச்சி உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் மிலிடரி ஓட்டலை மூச்சுக்காட்டாமல் தாண்டிச் சென்றுவிடுவீர்கள்

என்பதே உண்மை.

மாய்ந்து மாய்ந்து ஒழுக்கத்தை வற்புறுத்துகிறவர்கள் சாமியார்கள் -ஆனாலும் சரி-- அரசியலார் ஆனாலும் சரி - மனித சமூகத்துக்கு முதலில் மிக வேகமாக, வயித்துக்கு சோறு நிறைவாகக் கிடைக்கிறதா. அடுத்து, ஆணும் பெண்ணும் பாலியல் பசி இல்லாமல், சிக்கல் இல்லாமல் நிறைவாக இருக்கிறார்களா என்பதைப் பார்க்க வேண்டும். இந்த இரண்டையும் ஏற்படுத்தித் தந்துவிட்டு அதன் பிறகு ஒழுக்கத்தை வற்புறுத்தினால் அர்த்தம் உண்டு. வயித்துப் பசி ஒரு கொடூரம்; பாலியல் பசி அதைவிடக் கொடூரம்.

கல்லூரிவிடுதியில் எம்மாவும் அவள் தோழியும் தங்கள் பாலியல்ப் பசியைத் தீர்த்துக் கொள்ள என்ன செய்து கொண்டார்கள் என்றும் சொல்கிறான் பைரன்.

●

இக்கதைகள் நமது முன்னோர்கள் உண்டாக்கித் தந்த சொத்து. மனிதனில், பாலியல் காரியங்கள் அவனுள் எப்படியெல்லாம் ஊடாடியிருக்கின்றன, அது என்னவெல்லாம் செய்யும் என்று தெரிந்து கொள்ள முடிகிறது.

கதைக் கட்டுமானம், கற்பனை, விசயம், மொழிப்பிரயோகம், மொழிலாவகம், மனுசமனம் இப்படி யாவுமே அறிந்துகொள்ள உதவுகின்றன. தொடர்ந்து இக் கதைகளைச் சேகரித்து வெளியிட்டுக் கொண்டே இருப்போம்.

வெகுசனப் பத்திரிகையில் இக்கதைகள் தொடராக வந்ததினால் பல அநியாயங்கள் நேர்ந்துவிட்டன இக் கதைகளுக்கு. கதை சொல்லியின் அசல்மொழியில் அவன் அல்லது அவள் சொன்ன அதே சொற்களைப் போட்டு எழுதமுடியவில்லை. இது ஒருவகையில் தமிழுக்கும் நட்டம் தான்.

இதுக்குப் பரிகாரம் இக்கதைகளை நேரடியாகவே புத்தகமாக்கிவிடுவதுதான்.

கதை சேகரிப்பாளர்களுக்கு என்று சில இயல்புகள் இருக்க வேண்டியதிருக்கின்றன. தூண்டில் காரனுக்கும் வேட்டைக்காரனுக்கும் இருக்கவேண்டிய அசராத பொறுமை. கிடைக்கும் கதைகளை வின்னப்படாமல் அப்படியே. சொன்னது சொன்னபடிக்கே எழுத்தில் பதிவு பண்ணுவது; தேன் எடுத்தால் தேனாகவே இருக்க வேண்டும். என்பது போல கதை சொல்லியின் இருப்பு, அங்க அசைவுகள் முகம்போற போக்கு.

கதைகேட்கும் போது பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர்களின் விமர்சனம், திருத்தம், சிலசமயம் சொல்லும் மாற்று வடிவம் இவையாவையுமே பதிவு பண்ணுவதும் நலமே. அன்பர் கழனியூரனை ரொம்பவே பாராட்ட வேணும். ஒரு தேனீயின் சுறுசுறுப்போடு இயங்கக் கூடியவர். எங்கள் இருவருக்கும் தமிழகம் முழுவதும் வசவும் கிடைத்தது. வாழ்த்தும் கிடைத்தது. அதற்குப்பொறுப்பு மெய்யாகவே நாங்கள் இருவரும் அல்ல; அக்கதைகளை உண்டாக்கியவர்கள்தான்!

காரியம் என்று இறங்கினால் நல்லது கெட்டது நாலும் வரும் என்று அனுபவஸ்தர்கள் சொல்லியிருக்கிறார்களே.

இந்த "நாட்டுப்புறப் பாலியல் கதைகள்" தொகுப்புக்கு எனது மதிப்பிற்குரிய பேராசிரிய நண்பர்.டாக்டர். தே. லூர்து அவர்கள் அணிந்துரை தந்து கனம் பண்ணியிருக்கிறார். எனது சார்பிலும் கழனியூரன் சார்பிலும் நன்றி தெரிவிக்கிறேன்.

கி. ராஜநாராயணன்

புதுவை.

1 - 2 - 1994

## அணிந்துரை

**டாக்டர் தே. லூர்து**
துறைத் தலைவர்,
நாட்டார் வழக்காற்றியல் துறை,
தூய சவேரியார் கல்லூரி,
பாளையங்கோட்டை 627 002.

பாலியல் கதைகள் உலகில் பல்வேறு பகுதியிலும் வழக்கிலுள்ளன. மேலை நாடுகளில் இத்தகைய பாலியல் கதைகளும் நகைப்புகளும் (JOKES) தொகுக்கப்பட்டு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. தமிழ்நாட்டில் இத்தகைய கதைகள் இன்றும் நாட்டாரிடையே வாய்மொழியாக வழங்கி வருகின்றன. ஆண்கள் கூடியிருக்கும் இடங்களிலும் பெண்கள் தனித்திருக்கும் இடங்களிலும் பாலியல் கதைகள் எடுத்துரைக்கப்படுகின்றன. சில ஊர்களில் பெண்கள் இருந்தாலும் ஆடவர் இக்கதைகளைச் சொல்வதும் பெண்கள் அவற்றைக் கேட்பதும் இயல்பாகவே காணப்படுகின்றன.

ஆனால் இத்தகைய கதைகளை ஆபாசக் கதைகளென்றும் இத்தகைய கதைகளைத் தொகுத்து வெளியிடக் கூடாது என்றும் சில ஒழுக்கசீலர்கள் குறிப்பிடுகின்றனர். இத்தகைய கதைகளைத் தொகுத்து வெளியிடுபவர்கள் 'ஒழுக்கக் கேடிகள்' என்றும் அவற்றைப் பதிப்பிப்போர் சமூகத்தைக் கெடுப்போர் என்றும் அந்த ஒழுக்க சீலர்கள் (HYPOCRITES) குறிப்பிட்டு வருகின்றனர். இந்த ஒழுக்க சீலர்கள் தங்களுடைய புராணக் கதைகளில் காணப்படும் பாலியல் கதைகளைப் புனிதமானது என்று ஏற்றுக் கொள்வர், ஆனால் நாட்டார் தம் வழக்கிலுள்ள பாலியல் கதைகளை ஆபாசக் கதைகள் என்று 'பூனை கருவாட்டை வெறுத்து ஒதுக்குவது போல்' வெறுத்து ஒதுக்குவார்கள். புராணக்கதைகளெல்லாம் ஆபாசக் கதைகள் என்று நான் சொல்ல வரவில்லை. எந்தவொரு நாட்டார் வழக்காற்றியலனும் அவ்வாறு கூற மாட்டான். இப்புராணக் கதைகள் கூட ஒரு காலத்தில் வாய்மொழியாக வழக்கில் இருந்தவைதாம். எந்த மொழியைச் சார்ந்த அல்லது எந்த மதத்தைச் சார்ந்த புராணக் கதைகளாக இருந்தாலும் அவற்றின் இயல்புகள் இவ்வாறுதான் இருக்கும்.

1976ல் நான் எழுதிய 'நாட்டார் வழக்காற்றியல் ஓர் அறிமுகம்' என்ற நூலில் "இத்தகைய கதைகளைத் தொகுத்து, எழுத்திலே

கொணர்ந்து ஆய்வு செய்யத் தமிழகம் ஒப்புமா?" என்று கேட்டிருந்தேன். இன்று இப்பாலியல் கதைகளையெல்லாம் தொகுத்து அச்சிற்குக் கொண்டு வந்திருக்கிறார் எழுத்துலக பிரம்மா கிராஜநாராயணன் அவர்கள். கி.ரா.வைத் தவிர வேறு யாரும் இவற்றை எழுத்திற்குக் கொண்டு வந்திருந்தால் என்ன பாடு பட்டிருப்பார்கள்? இவர் தொகுத்து வெளியிட்ட பாலியல் கதைகளில் உடலுறவையும் ஆண் பெண் பாலுறுப்புகளையும் வெளிப்படையாகக் கூறாது கதை சொல்பவர்களே தணிக்கை செய்து எடுத்துரைக்கின்றனர். தமிழில் ஏன் இத்தகைய சொற்களைச் சொல்லக் கூடாது? எப்பொழுதிலிருந்து இந்தச் சொற்களைச் சொல்லக் கூடாது என்ற நிலை வந்தது? தமிழில் சொல்லாத போதும் ஆண், பெண் பாலுறுப்புகளை ஆங்கிலச் சொற்களில் பேசுகின்றோமே? ஆங்கிலச் சொற்களைக் கேட்கும் போது அச்சொற்களைச் சொல்லுவோனை 'ஒழுக்கக் கேடி' என்றுநாம் நினைப்பது கிடையாதே? சங்க இலக்கியங்களில் 'முலை' என்றும் 'அல்குல்' என்றும் வந்திருக்கின்றனவே? ஒரு மொழியில் ஆண்பெண் பாலுறுப்புகளைக் குறிப்பதற்கு ஒரு சில சொற்கள் இருக்கும் போது அச் சொற்களைச் சொல்லக் கூடாது என்று விதி வகுத்தவர்கள் யார்? ஆண்பெண் பாலுறுப்புகளின் பெயர்களைச் சொல்லுவது வெட்கக்கேடு, ஒழுக்கக் கேடு என்ற எண்ணம் தமிழ்ச்சிந்தனையில் ஏன் புகுந்தது? அப்பெயர்களைச் சொல்வோர்கள் 'ஒழுக்கக் கேடிகள்' என்றும் சொல்லாது மறைப்பவர்கள் நாகரிகம் வாய்ந்தோர் என்றும் கருதுவது ஏன்? அடங்காக் கோபம் கொண்டு பிறரை வைது திட்டிப் பழிப்பதற்குப் பாலுறுப்புக்களின் பெயர்களை வசவுகளாக பயன்படுத்துகிறோம். இத்தைகைய இழி பொருட்பேறு (Semantic degradation) எக்காலத்தில் ஏற்பட்டது? இவ் வினாக்களெல்லாம் ஆழ்ந்து சிந்திப்பதற்குரியவை. சிந்தித்தால் நம்முடைய போலித்தனமெல்லாம் உடைந்து நொறுங்கிப்போகும்.

ஏதோவொரு பயன் கருதியே இக்கதைகள் சொல்லப்படுகின்றன. இக் கதைகள் ஒழுக்கக் கேட்டை வளர்ப்பவை என்று சொல்ல இயலாது. இவை நகைப்பூட்டுபவை என்பதில் ஐயமில்லை. வயிறு குலுங்கச் சிரிக்கச் செய்பவை என்பதும் தெளிவு. இக் கதைகள் பலதோற்றத்திற்கான அல்லது அழிவிற்கான காரணங்களைச் சொல்லும் (AETIOLOGICAL TALE) கதைகளாகவுள்ளன. இக்கதைகளுள் பல புராணக் கதைகளின்

இயல்புகளைக் கொண்டவையாகத் திகழ்கின்றன. சோதிடன் ஒருவன் தன் மனைவியைக் கூடுவதற்குக் காலங்கணித்து அதன் பின்னர் அரசனின் அழைப்பை ஏற்று மனைவியைப் பிரிந்து வேளாரின் பேத்தியைக் கூடாது தோற்று, மனைவி வேறொருவனுடன் தொடர்பு கொண்டு உலகாளும் குழந்தையைப் பெற்றெடுத்தது நமக்கு மகாபாரதப் பராசர மகரிஷியை நினைவு படுத்தவில்லையா? இக் கதை மகாபாரதத்திற்கு முன்னருங்கூடக் கூறப்பட்டிருக்கலாம்.

உலகத் தோற்றம், மனிதனின் படைப்பு, ஊழிப் பெருவெள்ளம் போன்ற தமிழ்ப் புராணக் கதைகள் (MYTHS) எங்கே போயின? புராணக் கதைகள் எப்பொழுதும் பல வட்டங்களாகச் (CYCLES) சுற்றி வரும். ஒன்றின் முடிவில் மற்றொன்று கிளைத்துத் தளிர்க்கும். கிரேக்க, வடமொழிப் புராணக் கதைகளிலும் வட அமெரிக்க இந்தியர்களின் புராணக்கதைகளிலும் இத்தகைய இயல்பைக் காணமுடியும். இத்தகைய தமிழ்ப்புராணங்கள் எங்கே போய்ச் சேர்ந்தன? இத்தகைய பாலியல் கதைகளுக்குள்தான் அந்தப்புராணக் கதைகள் மறைந்திருக்கும் என்பது என் கருத்து. உலகத் தோற்றம் பற்றிய கதைகள் தகாப்புணர்ச்சி சார்ந்தவையாகத்தான் இருக்கும். தந்தை - மகள் உறவு, தாய் - மகன் உறவு, சகோதர - சகோதரிகள் உறவு போன்றவற்றை எந்த மொழியைச் சார்ந்த புராணக்கதைகளிலும் காணமுடியும். பைபிளின் பழைய ஏற்பாடும் இதற்கு விதிவிலக்கன்று.

இத்தகைய தமிழ்ப் புராணக் கதைகளைப் பாலியல் கதைகளில்தான் காணமுடியும். மழை பெய்து வெள்ளம் பெருகி அப்பனும் மகளும் சுரைக் குடுக்கையின் மூலம் தப்பித்து அதனால் சுரைக்காய் சாப்பிடாமல் இருப்பதாக வரும் கதை காணாமல் போன தமிழ்ப் புராணக்கதைதான். அண்ணண், தங்கையை கூடுதற்காகத் துரத்திக் கடைசியில் கடல் அலைகளாக மாறி ஒருவரை ஒருவர் துரத்துவதாக வருவதும் புராணக் கதையின் இயல்பு கொண்டதுதான். பாலியல் கதைகள் அனைத்தும் பல திரிபு வடிவங்களோடு சேர்க்கப் பெற்றால் தமிழ்ப் புராணக்கதைகளை மீட்டெடுத்தவர்களாவோம்.

பெரும்பாலான கதைகளில் அரசனின் மனைவியும் அரசனின் மகளுமே பாலியல் கேலிக்குள்ளாகின்றனர். இதற்கு ஏதோ ஒரு பின்புலம் இருக்க வேண்டும். இது குறித்தும் எண்ணிப்பார்ப்பது நல்லது. இத்தகைய கதைகளைத் தொகுக்கும்

போது கதைசொல்லிகளிடமும் (கதைஞர்கள்) கதையைக் கேட்போரிடமும் பேட்டிகண்டு கருத்துக்களைச் சேகரிப்பது நல்லது.

கள்ளக் கணவனும் கள்ள மனைவியும் தமிழ் நாட்டார் கதைகளில் மட்டுமல்லாது உலகெங்கும் சொல்லப்படும் கதைகளிலும் வருகின்றனர். ஆனால் மற்ற மொழிகளைவிட இத்தகைய கதைகள் தமிழில் ஏராளம் காணப்படுகின்றன என்பது என் எண்ணம். இதனை ஒரு கருதுகோளாகக் கொண்டு ஆய்வு செய்ய வேண்டும்.

சில பாலியல் கதைகள் மூடக்கதைப் (NOODLE TALES OR NUMSKULL TALES) பண்பு கொண்டவையாகக் காணப்படுகின்றன. இக்கதைகளில் வரும் பாத்திரங்கள் பாலியல் அறிவு பெறாத மூடர்களாகவும் சொல்வதைத் தவறாகப் புரிந்துகொள்ளும் கூதரைகளாகவும் (கூர்கெட்டவர்களாகவும்) உள்ளனர். சாதாரணமாக மூடக் கதைகளில் யாராவது ஒருவன் இடையில் வந்து அவர்களுடைய குறையைத் தீர்த்து வைப்பான். இந்தக் கதைகளிலும் அத்தகைய கதாபாத்திரங்கள் ( பாட்டியும் ஆசிரியரும் ) வருகின்றன. சில கதைகளில் இந்த ஊப்பைகள் பாலியல் அறிவு பெற்றவர்களாக மாறுவதும் சிலர் மாறாமல் பேதையராகவும் இருக்கின்றனர். இந்தப் பாலியல் பற்றிய மூடக்கதைகளும் (ஞா. ஸ்டீபன் என்பவர் பாலியல் சாரா மூடக்கதைகளை ஆய்ந்துள்ளார்) சேகரிக்கப்பட்டு ஆய்வுக்கு உட்படுத்த வேண்டும்.

குறிப்பிட்ட சிலர் , குறிப்பிட்ட பாலியல் கதைகளைக் கேட்டறிந்து அன்றாடம் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் குறிப்பிட்ட ஒரு நடையில் குறிப்பிட்ட சில காரணங்களுக்காக நிகழ்த்திக் காட்டுகின்றனர். சில கதைகளை நிகழ்த்தித்தான் காட்ட முடியும் என்பதைக் கி. ரா. ஒரு நல்ல ஆய்வாளரின் நிலையிலிருந்து சுட்டிக் காட்டுகிறார். ஒரு களஆய்வாளன் வெறும் கதைகளை மட்டுமல்லாது சைகைகளையும் கூர்ந்து கவனித்துக் குறிப்பிட வேண்டும் என்பதை, "ஊமை சாட்சியம் 'சொன்ன' அந்தக் கதையை கைவிரல்களால்தான் செய்து காட்ட முடியும். சொன்னால் அவ்வளவு சுவாரஸ்யம் இராது! ஆகவே இதை எழுதவும் முடியாது. ஒலிநாடாவில் பதிவு செய்யவும் முடியாது. விரல் அசைவுகளை ஒளி நாடாவில் பதிவு செய்து காட்டலாம். இந்த மாதிரியான உருவத்திலும் நாட்டுப்புறக் கதைகள் இருக்கின்றன" என்கிறார் கி.ரா.

மேற் குறிப்பிட்ட நுணுக்க விவரங்களைப் பற்றிய நுட்பமான

ஆய்வு பாலியல் கதைகள் பற்றிய மிக ஆழமான நுண்ணறிவை ஊட்டுவதோடன்றி இத்தகைய கதைகளைச் சொல்லுவோரின் தனித்த ஆளுமையையும் வெளிப்படுத்தும். இத்தகைய உளவியல் ஆய்வுகள் இன்னும் தமிழில் நடைபெறவில்லை.

இத்தகைய பாலியல் கதைகளைத் தொகுக்கக் கூடாது, தொகுத்தாலும் அச்சிடக் கூடாது என்றிருந்த நிலை மாறித் தொகுத்து அச்சில் கொண்டு வந்திருக்கின்றார் கி.ரா. அவ்வாறு அச்சில் கொண்டு வரும்பொழுது கி.ரா கதைகளைத் தொகுத்தவாறே அச்சில் கொண்டு வந்திருக்கிறாரா? அல்லது அவற்றைத் தம் போக்கில் திரித்து மாற்றி எழுதுகிறாரா என்பது தெரியவில்லை. அவரது 'நகாசு' வேலைகள் யாவை? அவரது கைவண்ணங்கள் யாவை என்பவையும் கவனத்திற்குரியன.

சில நாட்டார் கதைகளை எழுதி அந்தக் கதைகளுக்கு விளக்கமும் சொல்லித் தாம் செய்வது சரியா என்று என்னை ஒருமுறை கேட்டிருந்தார் கி.ரா. அதற்கு நான் பதில் எழுதவில்லை. ஏனென்றால் கி.ராவும் ஒரு கதை சொல்லி. கதை சொல்பவர்களெல்லாம் கேட்டவாறு கதைகளை மீண்டும் சொல்லிவிடுவதில்லை. அப்படியிருக்க ஒரு கதை சொல்லிக்குக் கட்டுப்பாடு விதிக்க வேண்டாம் என்று நான் பேசாமல் இருந்துவிட்டேன். கதைகளுக்கு நாட்டார் அளிக்கும் விளக்கங்களையும் ஓர் ஆய்வாளன் தொகுக்க வேண்டும் என்று சொல்லும் பொழுது கி.ரா. அவர் பாணியில் அளிக்கும் விளக்கத்தையும் நான் தடுக்க விரும்பவில்லை.

கி.ரா. தாம் தொகுத்த கதைகளையும் கேட்டறிந்த கதைகளையும் கழனியூரன் தொகுத்துக் கொடுத்த கதைகளையும் அச்சிற்குக் கொண்டு வந்திருக்கிறார். கழனியூரன் கதைகளைத்திரட்டுவதில் ஒரு சுறுசுறுப்பான தேனீ. நல்ல பண்பாளர். அவரிடம் ஏராளமான நாட்டார் கதைகள் கைவசமுள்ளன. அவற்றையெல்லாம் அவர் அறிவியல் அடிப்படையில் தொகுத்து வேண்டிய நுணுக்க விவரங்களோடு வெளியிட்டால் மிகப்பயனுளதாக இருக்கும்.

**தே. லூர்து**

*27 டிசம்பர் 1993.*

## அறிமுகம்



நெல்லை கட்டபொம்மன் மாவட்டம் தென்காசி வட்டத்தில் கழுநீர்க் குளம் என்று ஒரு கிராமம். இந்த ஊரில் பிறந்தவர் கவிஞர் கழனியூரன். ( சொந்தப்பெயர்: எம். எஸ். அப்துல்காதர்) 35 வயசான இவர் திருமணமாகி குழந்தை குட்டியுடன் உள்ள குடும்பஸ்தர். ஆசிரியத்தொழில் பார்க்கிறார். இப்போது மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக் கழகத்தில் இளம் முனைவர் பட்டம் பெற ஆய்வு மாணவராகச் சேர்ந்திருக்கிறார்.

அவர் என்னைச் சந்தித்த போது, நாட்டுப்புறக் கதைகளை ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளுங்கள் என்று சொன்னேன். அதோடு மற்றவர்கள் செய்கிறதுபோல அச்சில் வெளியான கதைகளை வைத்து ஆய்வு பண்ண வேண்டாம். நாட்டுப்புறத்தில் போய் அச்சில் வராத கதைகளைச் சேகரித்து அவைகளை ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளுங்கள் என்றேன். சரி என்றார்.

ஒப்புக் கொண்ட கழனியூரனிடமிருந்து கடிதம் வந்தது. நிறைய்யக் கதைகள் கிடைப்பதாக. பாலியல் கதைகளும் ஏராளமாகக் கிடைப்பதாக.

பாலியல் கதைகள் வேணுமா; பார்க்கிறீர்களா, என்று கேட்டு கடிதம் எழுதியிருந்தார்.

எனக்கு ஒரு அலட்சியம். நமக்குத் தெரியாத பாலியல்களா, என்று! அதே போல்தான் நான் பதிலும் எழுதினேன்.

●

ஒரு நாள் மதுரையில், சேத்திக்காரர்களோடு ஒரு பாடாவதி சினிமாப்படம் ரண்டாம் ஆட்டம் பார்த்துவிட்டு ப்ரகாஷ் ரூமுக்குப் படுக்கப் போனோம். தூக்கம் பிடிக்கலை யாருக்கும். விக்ரமாதித்யன்தான் கேட்டார் “நைனா, ஒரு கதை சொல்லுங்க; நல்...ல அருமையான கெட்ட வார்த்தைக் கதையா இருக்கணும்.”

தூங்குவதற்காக விளக்கை அணைத்திருந்தோம். இருட்டில் படுத்துக் கொண்டே பேசிக் கொண்டிருந்தவர்களுக்கு திடீரென்று இப்படி ஒரு ஞாபகம் வந்துவிட்டது.

அந்தக் கூட்டத்தில் நான் ஒருத்தன்தான் வயசாளி; அம்புட்டும் இளந்தாரிகள்.

கதை சொல்லுவதற்கு முன் ஒரு கண்டிஷன் போட்டேன். இந்தக் கூட்டத்தில் முதலில் யாராவது ஒருத்தர் எனக்கு ஒரு "கெட்ட வார்த்தைக் கதை" - ஒரே ஒரு கதை சொல்லணும்; அதும் நான் இதுவரை கேள்விப்படாத கதையா இருக்கணும். அப்படிச் சொல்லிவிட்டால், விடியுந்தண்டியும் ஏன் விடிஞ்ச பெறகுங் கூட 'காரமான கெட்ட வார்த்தைக் கதைகளாகவே சொல்லிக் கொண்டேயிருப்பேன்"

கெட்ட வார்த்தைக் கதைகளில் "சாம்பியன்" என்று பட்டம் வாங்கியிருந்த தோல்பாவைக் கூத்து ராமசாமி அப்போது மதுரைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு மாணவர். அவரைக் கதை சொல்லச் சொல்லி ஒரு மனதாகத் தீர்மானித்துச் சொல்ல வைத்தனர்.

அவர் கதையைத் தொடங்கி நாலைந்து வாக்கியங்கள் சொல்லி வரும்போதே, இந்தக் கதையா என்று கதைச் சுருக்கத்தை ஒரு வரியில் சொல்லிக் கேட்பேன். "சரி, இன்னொரு கதை சொல்லுகிறேன்" என்று ஆரம்பிப்பார். அதுக்கும் அதே கதிதான் கிடைக்கும். இப்படியாகப் பல கதைகள் சொல்லி, முடியாமல் கடைசியில், ஒரு "பிரம்மாஸ்திரக்" கதையைத் தொடங்குவதற்கு "லைட்டைப்போடுங்கள்" என்றார் சேக்காளிகளிடம்.

லைட் என்னத்துக்கு; சும்மா இருட்டிலேயே சொல்லலாமே என்றேன்.

அதை இருட்டில் காட்ட முடியாது; வெளிச்சம் இருந்தால்தான் செய்துகாட்ட முடியும் என்றார்.

ஓ... அந்த ஊமை சாட்சி சொன்ன கதையா என்று கேட்டதும் ராமசாமி உட்பட அனைவரும் ஆமா ஆமா என்று சொல்லிச் சிரித்தார்கள்.

ஊமை சாட்சியம் ''சொன்ன'' அந்தக் கதையை கைவிரல்களால்தான் செய்து காட்ட முடியும். சொன்னால் அவ்வளவு சுவாரஸ்யமாக இராது!

ஆகவே, இதை எழுதவும் முடியாது, ஒலிநாடாவில் பதிவு செய்யவும் முடியாது. விரல் அசைவுகளை ஒளிநாடாவில் பதிவு செய்து காட்டலாம்.

இந்த மாதிரி உருவத்திலும் நாட்டுப்புறக் கதைகள் இருக்கின்றன. 300 வகைகளாக நாட்டுப்புறக் கதைகளைப் பிரித்திருப்பதாக சமீபத்தில் கேள்விப்பட்டேன். இந்த ஊமையின் சாட்சியம் அதில் எந்த வகையினது என்று தெரியவில்லை!!

அய்ம்பதுகளின் ஆரம்பத்திலிருந்தே நான் நாட்டுப்புறக் கதைகளில் கவனம் செலுத்த ஆரம்பித்திருந்ததினால் இத்துறையில் எனக்குக் கிட்டதட்ட பொன்விழாக் கொண்டாடும் அளவுக்கு அனுபவங்கள் இருந்தாலும் கற்றது கைமண் அளவே என்பதை இப்போதைய இளந்தாரிகள் எனக்கு நிரூபித்துக் கொண்டிருக்கிறார்கள். அதில் ஒருவர்தான் இந்தக் கழனியூரன். இவரது சேகரிப்பைப் பரிசீலனை பண்ணிய போது, நிறைவாக இருந்தது. இத்துறையில், சேகரிப்பில் இவருக்கு ஒரு எதவு பிடிபட்டுவிட்டது; நொறுக்கித் தள்ளுகிறார்.

என்னுடைய பாலியல் கதை சேகரிப்புகளைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்துக் கொண்டு, இந்த இளைஞரின் சேகரிப்பிலிருந்து சிலபல கதைகளைக் கொடுக்கிறேன்; புதிய தலைமுறை யினரையும் ஊக்குவிக்க வேண்டாமா?

இது முடிந்ததும் வழக்கம்போல் நான் தொடர்வேன்.

## 1

ஏதோ ஒரு ஊருக்குப் பக்கத்துல ஒரு காலத்தில அரசாண்ட ஒரு ராஜாவோட அரண்மன இடிஞ்ச இடிபாடுக இன்னும் இருக்கு. பெரிய பெரிய குதிரை லாயங்கள்ளாம் இப்பவும் பார்க்கலாம். எத்தனையோ குதிரைக கட்டிக் கிடந்த அந்த குதிரை லாயத்தைப் பத்தியும் அந்த ராசாவைப் பத்தியும் அந்தக் குதிரைச் சேவகனைப் பத்தியும் பரம்பரையா ஒரு கதை இருக்கு.

அந்த ‘அரமனை மேட்டு’ல ஆடு மேச்சிக்கிட்டிருந்த ஒரு பெரியவரு இந்தக் கதையச் சொன்னாரு.

இந்த ராசாவுக்கு குதிரைகள் பேர்ல அம்புட்டுப் பிரியம். சாதிக் குதிரையா இருந்தா எத்தன பவுனு கொடுத்தும் வாங்கிடுவாரு. அந்தக் குதிரைக்காக என்ன வேணுன்னாலுஞ் செய்வாரு. அப்பிடி அதுக பேர்ல ஒரு *கிறுக்கு அவருக்கு.

அவரோட குதிரைப் பண்ணையில குதிரைப் படைக்கு வேண்டிய எத்தனையோ குதிரைக இருந்தது. அதுல ஒரு அழகான பொலி குதிரை இருந்தது. ராஜாவுக்கு அந்தக் குதிரை பேர்லதாம் ரொம்பப் பிரியம். அதத் தனியாக் கவனிக்க ஒரு குதிரைச் சேவகன் இருந்தாம். அங்க உள்ள அத்தனெ குதிரைச் சேவகங்கள்ள அவந்தான் தலைமைச் சேவகன். அவனுக்குச் சாப்பாடு அரண்மனையிலதாம். அரண்மனைச்

சாப்பாடு சாப்புட்டு சாப்புட்டு நல்ல கொழுப்பேறிப் போயிருந்தாம்.

அரண்மனையில "வெள்ளை" எடுக்க ஒரு ஏகாலிப் பொண்ணு வருவா. அவ வழக்கமா அந்த வழியாத்தாம் போவா. ஆள் நல்லா கட்டுமுட்டா குதிரை கெணக்க இருப்பா. இந்த குதிரைச் சேவகனுக்கு அவமேல ஒரு கண்ணு. அவ மேல உள்ள ஆசைய அவனால அடக்க முடியல.

ஒரு நா, அவ அந்த லாயத்து வழியா வந்தப்ப அவகிட்ட தன்னோட ஆசையச் சொன்னாம். அவ 'அதுக்கு சம்மதிக்கல. இவனுக்கானா என்ன செய்றதுன்னுட்டுத் தெரியல. பிறகொருநா அவ வந்தப்ப அவளெ அவம் வலுவந்தமாப் பிடிச்சு தன்னோட ஆசைய நிறைவேத்த முயற்சிப் பண்ணுனப்பொ, அவ அவனெ லேசாத் தள்ளிவிட்டுட்டுப் போயிட்டா. இவனுக்கானா ஏலாமையும் அவமானமும் தாங்க முடியல.

அவள எப்படியாச்சும் பழிவாங்கணும்ன்னு தீர்மானிச்சி, அண்ணையிலிருந்து ராஜாவுக்குப் பிரியமான பொலி குதிரைய சரியா கவனிக்காம நேரத்துக்கு புல்லு வைக்காம, கொள்ளு வைக்காமப் போட்டுட்டாம்.

குதிரை மெலிஞ்சி போச்சி. ராஜா வந்து பாத்தப்பொ, அந்தக் குதிரையப் பார்த்ததும் பதறிப் போனாரு. ஏம்பா இந்த குதிர இப்பிடி ஆயிட்டதுன்னு கேட்டாரு.

மகாராஜா, குதிரைக்கு ஒரு ஏக்கம் விழுந்திருச்சு. அதெத் தீத்தாத்தாம் குதிர பொழைக்கும். இல்லாட்டா, குதிர அதே ஏக்கத்துல உசுரவே விட்டுரும் போலுருக்குன்னாம்.

குதிரைக்கு வந்த அந்த ஏக்கத்தப் பத்தி ராஜா கேட்டாரு. அதுக்குக் குதிரைச் சேவகன் சொன்னானாம், "மகாராஜா இந்த வழியா கொஞ்சநாளா ஒரு ஏகாலிப் பொண்ணு போகவும் வரவுமா இருக்கா. அவளப் பார்த்ததுல இருந்து இந்தக் குதிர ஒண்ணுமே திங்க மாட்டேங்கு. அவமேல ஏக்கமா அதே நெனப்புல இருக்கு. அவளப் பாக்குற நேரந்தான் கனைக்கின்னாம்.

"இம்புட்டுத்தானா; நாளைக்கே குதிரையோட ஏக்கத்தெத் தீத்துவச்சிருங்கே" என்று உத்தரவு போட்டுட்டார்!

குதிரைச் சேவகன் நினைத்தபடியே அவளெப் பழிவாங்க வாய்ப்பு ஏற்பட்டுப் போச்சி. ராஜாவே உத்தரவு தந்துட்டாரேங்கர சந்தோஷத்துல, தன்னோட மத்த குதிரைச் சேவகங்கள்டெ ராஜாவோட உத்தரவச் சொல்லி அவங்களையும் சேத்துக்கிட்டு அந்தப் பெண்ணெ அமைக்கத் தயாரானாங்க.

உடனே குதிரைக்கு வேண்டிய தீனியைக் கொடுத்து கவனிக்க ஆரம்பிச்சாம். உடம்பத் தேச்சி விட்டாம். அதுக்கான மருந்துகளெ எல்லாங் கொடுத்து குதிரைக்கு 'வெறி' ஏத்துனாம்.

அடுத்தநாள் சாயந்திரம் அந்த ஏகாலிப் பொண்ணு வழக்கம் போல அந்தப் பக்கமாப் போனா. போயிட்டுத் திரும்புறபோது, எப்படா வருவாண்ணு இருந்த குதிரைச் சேவுகங்க நாலு பேரு அவளெ வலுவந்தமாப் பிடிச்சித் தூக்கிட்டு வந்தாங்க. அவ கூப்பாடு போட்டு அலறுனா. ஒன்னெ தூக்கிட்டு வரச்சொல்லி ராசாவோட உத்தரவு; சத்தங்கித்தம் போடாதெ. போட்டாலும் ஒரு பிரயோசனமும் கெடையாதுன்னு அவங்க சொன்னதும் அடங்கிட்டா.

அவளக் கொண்டு போனவங்க, அங்கெ உள்ள குதிரை "பயிராகிற" கிட்டி இருக்கிற இடத்துக்குக் கொண்டு போயி வசமா பிடிச்சிக்கிட்டாங்க. தலைமைச் சேவுகன்- தயாரா, அண்ணக்கி மொடையடிச்ச பெண் குதிரையோட மோத்திரத்தைப் பிடிச்சு வச்சிருந்தத அவமேல "அறை"யில ஊத்துனாம்.

"அது ஏம் அப்பிடி ஊத்தணும்?" ன்னு சந்தேகம் கேட்டதுக்கு அந்தப் பெரியவர் சொன்னார்.

அது தெரியாதா ஒனக்கு. சினையாகணும்ங்கிற பெண் மிருகம் "மொடை" அடிக்கும். அந்த மொடை கலந்துவர்ற மூத்திரத்தை ஆண்மிருகம் சுவை பார்த்ததும் அதுக்கு தெரிஞ்சி போகும். மொடையடிச்சி பருவமா இருக்கறதெ ருசி மணத்திலேயே கண்டுக்கிட்டதும் அதோட காமவெறி அதிகமாகி வேகமா "விழும்".

சில சமயம், தெரியாம சினை மிருகங்களக் கொண்டு போயி நிறுத்தினாலும் ஆண் பொலி மிருகம் மோந்து பாத்தோ ருசி பார்த்தோ சினைன்னு தெரிஞ்சிக்கிட்டா விழாது. திரும்பிப் போயிடும்.

மனுசப்பய பிள்ளெககிட்டதாம் இந்த ஒழுங்கெல்லாம் கெடையாது என்று சொல்லிவிட்டு கதையைத் தொடர்ந்தார்.

கொடூரமான அந்தக் குதிரைச் சேவகன் பொலிகுதிரையை அவுத்துவரப் போனானாம்.

இவன் வார வரத்திலிருந்தே அந்தக் குதிரெ, தன்னெ பொலிகிட்டிக்கித்தான் கொண்டுபோக வாரம்னு தெரிஞ்சிக்கிடுச்சி.

அதெ, அவுக்கிறதுக்கு முன்னாடி அது முன்னத்தங்காலால தரையைத் தேச்சிகிட்டுக் கனைச்சது. அது காலத் தேச்சத் தேய்ப்புல, அதோட லாடம் லாயக்கல்லுல பட்டு தீப்பொறி பறந்துச்சு. பொதுவா, பொலிகுதிரைக இவ்வளவுக்கு உயர்ந்த ஜாதிக் குதிரைகளை வச்சிகிட மாட்டாங்க. இந்தக் கூறுகெட்ட ராசாதான் இப்பிடி அழகான குதிரைய இதுக்குப் பயன்படுத்தினாரு.

"அதெப்படிப் பெரியவரே, உயர்ந்த சாதிக் குதிரையைப் பயன்படுத்துனாத்தானே அதேபோல உயர்ந்த சாதிக் குதிரைக் குட்டி கிடைக்கும்?" என்று கேட்டதுக்கு அவர் சொன்னார்:

அதெல்லாம் ஆடு, மாடுகளுக்குத்தான். சாதிக் குதிரைய இதுக்குப் பயன் படுத்துனா அது பாழாப் போகும்; பெறவு அது ஒண்ணத்துக்கும் உவயம் இல்லாமப் போயிரும்; அதுக்காச்சுட்டி, மோசமான குதிரைகளெ பொட்டைக் குதிரை மேல "விழ" விட்டுட்டு, அந்தப் பொட்டைக்கு திரைக்கு எதுக்க நல்ல அழகான சாதிக் குதிரைய நிறுத்தி வச்சிடுவாங்க. முன்னால இருக்க குதிரையத்தான் அது பாக்க முடியும். பெறத்தால தன்மேல விழுற குதிரைய அது பார்க்க முடியாது; அதனால, எப்பவுமே விழுற குதிரை மாதிரி குட்டி இருக்காது; எதுக்க நிக்க வச்ச குதிரை மாதிரிதாம் குட்டி இருக்கும்.

இவம், தலமச் சேவுகன், பொலி குதிரைய அவுத்துவிட்டுட்டு, ஓடிப்போயி முன்னால அவ பார்வையில படும்படியா நிண்ணுகிட்டாம்!!

கனைச்சிட்டே வெறியோட வந்த குதிரை, பொட்டைக் குதிரையோட மூத்திர வாடையை மோந்து பார்த்ததும் ஆவேசமாயிட்டது. ரண்டு கால்ல எந்திரிச்சு நிண்ணதும் அவ ஓ...ஓண்ணு வீறிட்டு பயந்து கத்துனா. அவள அமுக்கிப் பிடிச்சிருந்த பயகளும் ஓ...ஓண்ணு அவமாதிரியே கேலிக் குரல்ல கத்துனாங்க.

ஓங்கி உலக்கையால இடிச்சித்தாக்குன மாதிரி அவ பாவம் அப்படியே சுருண்டு விழுந்திட்டா என்று, சொன்ன பெரியவர், கழுத எறிய கழுததாம் தாங்கணும்; குதிரை எறிய மனுவாலத் தாங்க ஏலுமா?

அவ மயக்கந் தெளிஞ்சு எந்திரிச்சுப் பார்த்தப்ப அந்த குதிரைச் சேவுகம் இடுப்புல கைய ஊனிக்கிட்டு அவளப்பாத்து இடிஇடின்னு சிரிச்சாம். நாங்கையப் புடுச்சேன்; தட்டி விட்டயில்லெ. இப்பொ நீ எங்குதிரைக்கு பதில்

சொல்லும்படியா ஆயிட்டது பாத்தியான்னாம்.

ஆவேசம் வந்துட்டது அவளுக்கு. ரெண்டு கையாலயும் மண்ண வாரித் தூத்திக்கிட்டே, அடே நீயும் ஒன்னோட ராசாவும் இப்பிடி மண்ணாப் போயிருவீங்கடான்னா. அந்தப் பெண் பாவம் பிடிச்சிக்கிட்டு ராசாவும் அரண்மனையும் சுட்டு மண்ணா போயிட்டாக என்று சொல்லி நிறுத்தினார்.

## 2

ஒரு ஊர்ல ஒருத்தன் இருந்தான். அவனுக்குக் கல்யாணம் ஆய்ட்டு. பொண்டாட்டி கொஞ்சம் நடத்தை பிசகுனவ. கல்யாணம் ஆகுறதுக்கு முன்னாடியே ஒருத்தங்கூட தொடுப்பு உண்டும். கல்யாணம் ஆன பெறவும் அத விடல. புருசங்காரன் போனதப் பாத்து தூதாள்ட்ட கள்ளப்புருசனுக்கு சேதி சொல்லி அனுப்புவ. ஒரு நாசுவத்திதான் இவளுக்குத் தூதாளா இருந்தா. பெண்டாட்டிக்காரியின் நடத்தெ சரியில்லங்கிறது புருசங்காரன் காதுல அரசல்புரசலா விழுந்தது. இதெக் கண்டு பிடிக்கணும்னு நெனச்சாம். ஒருநா, ராக்காவலுக்குப் போறதா சொல்லீட்டு இவளுக்குத் தெரியாம ஓரிடத்துல ஒளிஞ்சிக்கிட்டு இருந்தாம். இவ கள்ளப் புருசனெத் தேடிப் புறப்பட்டுப் போனா.

இடவழியிலப் புருசம் பாத்துக்கிட்டாம்.

எங்கடி போற வேள தப்புன வேளையில? ன்னு கேட்டானாம்.

இத அவ எதிர்பார்க்கல.

'ராக்காவலுக்குப் போறேம்னுட்டு, எவளப் பாக்க நீரு இங்கனே நிக்கீரு?" ன்னு கேட்டா!

அது இருக்கட்டுண்டீ; நீ எந்திரிச்சி இந்நேரத்துல எங்கெ புறப்டு வந்தெ, அதெ முதல்ல சொல்லுன்னு கேட்டாம்.

நா "வெளிக்கு"ப் போறேம் ன்னா.

அதுக்குத்தான் ஊருலாம்புட்ட இடம் இருக்கெ; இங்கே ஏம் வந்தெ? ன்னு பிடிச்சாம்.

பயலுக்கு யாரோ சொல்லீட்டாங்க போலிருக்குன்னு "ஞஞ்ஞெமுஞ்ஞெ" ன்னு உளர்னா. "வெளிக்கு" த்தான் வருதேம்னு சாதிச்சா கடைசிய.

கைப்பிடியா அவள வீட்டுக்கு இழுத்துட்டுப் போயி, நடு கூடத்துல தூண்லெ கட்டிப் போட்டுட்டு வீட்டுக்குள்ள போயி படுத்துக்கிட்டாம்.

இவளுக்காக அங்கெ காத்திருந்த கள்ளப் புருசன் இவளெக் காணமேன்னுட்டு தூதாளெவிட்டுப் பாத்துட்டு வரச்சொன்னாம். அந்த நாசுவத்தி இங்க வந்து பாத்தா, இவளத் தூணு. கட்டிப் போட்டுருக்கு. தூணுலகட்டிப்போட்டுட்டு வீட்டுக் நள்ள போயிப் படுத்த புருசனுக்குத் தூக்கமும் வராம, துக்கமும் தாங்காம இவள என்ன செய்யலாம்; இப்படிப் பண்ணுதாளேன்னு பலமாதிரி நெனைச்சுக்கிட்டே இருந்தவம் எப்பிடியோ நல்லாத் தூங்கீட்டாம். தூணுல கட்டிப் போட்டுக் கிடக்கிறவளுக்கு அவ நெனப்பெல்லாம் எப்படியும் போயி கள்ளப் புருசனப் பார்த்து அவ ஆசெயத் தீத்துக்கிடணும்ங்கிறதுலேயே இருந்தது. நாசுவச்சி வந்து பாத்தா, நெலம இப்பிடி இருக்கு. தூணுல கட்டி வச்சிருக்குதெ வெவரமெல்லாங் கேட்டுத் தெரிஞ்சிக்கிட்டா.

சரி; ஒன்னய அவுத்து வுட்டுருதேம். என்னயே இந்தத் தூணுல இதேப் போல நீ கட்டிப்போட்டுரு. அவம் எந்திரிச்சிப் பார்த்தாலும் இருட்டுல சரியா “நிதா” ப்புடி படாது. நீ போயிட்டு வந்துரு; அவரு அங்கனே காத்துக்கிட்டு நிக்காருன்னு சொல்லி அவுத்துவிட்டு, நாசுவத்திய கட்டிப் போட்டுட்டு இவ போயிட்டா.

ஒரு நேரத்துல புருஷன் புரண்டு படுத்தான்; முழிப்புத் தட்டீட்டது. “இவள மூளியாக்கிட்டா இனிமே எவங்கிட்டேயும் போக மாட்டான்னு நெனச்சாம். எழுந்திரிச்சி மடியில இருக்கற சூரிக்கத்தியால நாசுவத்தியோட மூக்கெ அறுத்திட்டாம். இனிமே நீ எவங்கூடப் போறேன்னு பாக்குறென்னு சொல்லீட்டு வீட்டுக்குள்ளே போயி கதவப் பூட்டிப் படுத்துத் தூங்கிட்டாம்.

கள்ளப்புருசங்கிட்டப் போனவ அவனப்பாத்து முடிச்சிட்டு வீட்டுக்கு வந்தா. நடந்த சங்கதிய நாசுவத்தி சொன்னா. அதேபோல இவள தூண்ல கட்டிப்போட்டுட்டு அறுத்துப் போட்ட மூக்கையும் எடுத்துக்கிட்டு, தூது போனதுக்கு எனக்கு இதுவும் வேணும் இன்னமும் வேணும்னு வருத்தப்பட்டுக்கிட்டே விட்டுக்குப் போயிச் சேந்தா.

காலையில புருசங்காரன் தூணுல கட்டியிருந்த பொண்டாட்டி கிட்ட வந்தான். இவ தன்னோட கையால மூக்கெப் பொத்திக்கிட்டிருந்தா.

கைய எடு மூக்கு என்ன அளகுலிருக்குன்னு நாம் பாக்கட்டும்ன்னான்.

என்னெ சந்தேகப்பட்டு ஏம் மூக்க அறுத்தீளே; நா உம்மெயுள்ள

பத்தினியா இருந்தா அறுத்த ஏம் மூக்கு பழையபடி அப்படியே வரணும் ஆண்டவனேன்னு சொல்லி கைய எடுத்தா.

அறுத்த மூக்கு அப்படியே இருந்ததெப் பாத்து புருசங்காரன் அசந்து போயிட்டாம்!

அடடா, நம்ம பொண்டாட்டிக்காரி எப்பேர்ப்பட்ட பத்தினியா இருந்திருக்கா, இவளப் போயி நாம அநியாயமா சந்தேகப்பட்டு இப்படிப் பண்ணிட்டமேன்னு ரொம்ப வருத்தப்பட்டு அவள அவுத்துவிட்டு, தப்புதாந் தாயேன்னு மன்னிப்புக் கேட்டுக்கிட்டாம். அதுலெ இருந்து அவ எங்க போயி, எவ்வளவு நேரங் கழிச்சி வந்தாலும் எதுவுமே கேக்கறதில்லெ!

அங்க நாசுவம் வீட்டுல, காலையில விடிஞ்ச பெறகும் நாசுவத்தி எந்திரிக்காம படுத்துக்கிடந்தா. அவம் கத்தியத் தீட்டிக்கிட்டே, ஏ இவளே எந்தி, ஏ இவளெ எந்தின்னு சொல்லிச் சொல்லிப் பாத்தாம். அவ எந்திரிக்கறதாத் தெரியல. இவனுக்கு எரிச்சலும் கோவமும் வந்ததுல, கையிலிருந்த கத்திய அப்படியே அவ மூஞ்சியில விட்டெறிஞ்சாம்.

இதாம் சாக்குன்னு அவ, அய்யோ ஏம் மூக்கு போச்சேன்னு கூப்பாடு போட்டா! இவம் பயந்துட்டாம்.

பாவி, ஏம் மூக்கு போச்சேடான்னு ஒன்னு கூப்பாடு போட்டு அழுதா.

அய்யோ நாம இப்படி ஆகும்னு பாக்கலையேன்னு அவம் வருத்தப்பட்டு அவளெ வைத்யங்கிட்டேக் கூட்டீட்டுப் போயி மருந்து போட்டு குணமாச்சின்னாலும் அவ மூளியாத்தாம் இருந்தான்னாலும் அந்தத் 'தூது'' போறத மட்டும் நிப்பாட்டவேயில்லெ, கடைசி வரைக்கும்.

## 3

பொம்பளையத் தொடும் போது - அவள் அதிரூப சுந்தரியாக, கொஞ்ச வயசுக் குமாரியாக இருந்தாலும், தாளை ( பேப்பர்த் தாளை ) த் தொடுகிற போது இருக்கிற உணர்ச்சிதான் நமக்கு இருக்கணும்னு நம்ம ஊர்ல ஒரு மகான் சொன்னார்.

பின்னாளில் அவர் கொஞ்ச வயசுப் பொண்ணுகளோடு அம்மணக்குண்டியோட படுத்துக்காமிக்கிறேன்; அப்பவும் எனக்கு எந்தவிதமான காம உணர்ச்சியும் வராது என்கிறதை எல்லார்க்கும் முன்னாடி என்னையே நான் சோதிச்சிப்

பார்க்க விரும்புறேன்னு தன்னோட நெருங்கிய சீடர்களிடம் கலந்ததாகவும், அதுக்கு அவங்க "செ செ அதெல்லாம் வேண்டாம் வேண்டாம். ஓங்களோட ஒயர்ந்த நோக்கமும் சத்திய பரிசோதனையையும் புரிஞ்சிக்கிடுற அளவுக்கு நம்ம நாட்டு மக்கள் இன்னும் பரிபக்குவம் அடையலை. அதோட எப்படா சமயம் வாய்க்கும்ன்னு காத்திருக்கும் நம்மோட கொள்கை எதிரிகள் இதைப் பெரிசாக்கி தப்பாப் பிரச்சாரம் பண்ணிடுவாங்க"ன்னு சொல்லி அதைத் தடுத்து நிறுத்திட்டதாகவும் நாப்பது வருசங்களுக்கு முன்னாடி கேள்விப்பட்டேன். அது நெசமா பொய்யான்னு எனக்குத் தெரியாது.

ஒருவேளை அவருடைய அரசியல் எதிரிகள் கட்டிவிட்ட கதையாகக் கூட இது இருக்கலாம். அது எப்படியும் போகட்டும். கவி கழனியூரனின் சேகரிப்புக் கதைகளில் ஒன்றைப் படித்தபோது, காரணமில்லாமல் மேலே சொன்ன விசயம் எனக்கு ஞாபகத்துக்கு வந்தது.

இப்பொ அந்தக் கதையைச் சொல்லுகிறேன்:

ஒரு அரசகுமாரி, ரொம்ப அழகா இருப்பா. அவளோட தோழி அவளைவிட அழகா இருப்பா. அந்த அரசகுமாரி ஒரு வித்தியாசமான சுயம்வரம் நடத்துனா!

சுயவரத்தில் கலந்துகொள்ள வரும் வாலிபன், நிறை அம்மணமாக வரும் தன்னுடைய தோழியோடு ஒருநாள் ராத்திரியை எந்தவித மோக எழுச்சியும் கொள்ளாமல் கழிக்கணும்.

சம்மதப்பட்டு வருகிறவன், உடம்பில் சின்ன மோக உணர்ச்சி தெரிந்தாலும் வாளால் தலையைச் சீவுறதில்லை. உயிர்த்தலத்தைச் சீவி நாய்க்குப் போட்டுவிடுறெது.

இந்த நிபந்தனைக்குக் கட்டுப்பட்டு எந்த நாட்டு ராஜகுமாரனோ இளவட்டங்களோ வரலாம். இப்படி அறிவிச்சா அந்த அரசகுமாரி!

ரொம்ப நாளாகியும் ஒரு பயலும் வரலெ. எவம் வருவாம்! அதென்ன வெளையாட்டுக் காரியமா, இருக்கதே ஒண்ணே ஒண்ணு. ரெண்டு மூணு இருந்ததுண்ணாலும், சவம் ஒண்ணு போனாப் போகுதுண்ணுட்டு இருக்கலாம். இருக்கத இழந்துட்டு சேகண்டி அடிக்கறதுன்னுட்டு ஒரு ப்ய பிள்ளெகளும் போகல. ஒரே ஒருத்தம் மட்டும் நா வாரேம் ன்னு கிளம்புனாம்!

அவம் ஒரு அனாதெ. சிறுசில இருந்தே பிச்சை எடுத்துத் தின்னு வளந்தவன். எல்லோரும் தின்னுட்டுத் தூரப் போடுற

வாழப்பழத்தோலை எடுத்து அருமையாகத் திம்பான். தின்னு தின்னு நல்ல கிடாக் கெணக்க இருந்தாம். நல்ல வயசு. ஆளும்பாக்க லச்சணமாஇருந்தானாம். அவனுக்கு ஆசை எல்லாம் ஒண்ணே ஒண்ணுதாம். எங்கயாவதுபோயி வயிறு நிறையச் சாப்பிடணும்; நிம்மதியாத் தூங்கனும். அவனுக்கு இந்த ஆசெ நிறைவேறல.

அரண்மனையிலிருந்து வந்த இந்த செய்தியக் கேட்டதிலிருந்து அவம் மனசுக்குள்ளெ கொஞ்ச நாளா ஒரு எண்ணம் தோணுச்சி. இப்பிடி வாழ்றதவிட அப்படிப் போயி செத்துறலாம்னு துணிஞ்சிட்டானாம்.

குளிச்சு தலமுழுவி, மொதநாளே வண்ணாக் குடியில போயி யாருக்கும் தெரியாம எடுத்துக்கிட்டு வந்த வெளுத்த துணிமணிகளை உடுத்திக் கிட்டு நேர போனாம் அரமனைக்கு.

“நா நிறைவேத்த வந்திருக்கேம் ராசகுமாரியோட சவதத்தெ”ன்னாம்.

பாத்தாங்க எல்லாரும்; அடப்பாவிப் பயலெ; வம்படியா உசுரெ விட வந்துருக்கானேன்னு நெனைச்சாங்களாம்.

இப்பிடி ஒரு இளந்தாரி வந்திக்காம்னு கேள்விப்பட்டதும் அரசகுமாரிக்கு. பரவாயில்லை. இத்தன நாளு கழிச்சாவது ஒருத்தம் வந்திருக்கானேன்னு நெனச்சி, ராத்திரிச் சாப்பாடு அவனுக்கு விசேசமா ஏற்பாடு பண்ணச் சொன்னா. படுக்கையை அலங்காரம் பண்ணச் சொன்னா.

பய நிம்மதியா நிதானமா அரண்மனைச் சாப்பாட்டெ ஒரு புடி புடிச்சாம்.

படுக்கெ அறைக்குக் கூட்டிட்டுப் போனாங்க. எல்லாத்தையும் அவுத்துப் போடுன்னாங்க.

இதுஎன்ன எந்துணியா; எவந்துணியோ நமக்கென்னத்துக்கு இதுன்னு அவுத்துக் கொடுத்துட்டாம். ‘வெங்கம்பய ‘இது’ வெளிய கெடந்தா என்ன உள்ள கிடந்தா என்ன’ ன்னு சொல்ற சொலவத்த மனசுக்குள்ளெ சொல்லிக்கிட்டாம்!

வயிறு நிறைய்யச் சாப்புட்டது அப்பிடியே பயலுக்குத் தூக்கம் சொக்குது. ரொம்ப சுத்தமா இருக்க மெத்தையில படுக்க மனசு வரல. கீழெ தரையில படுத்துத் தூங்கீறலாமானு நெனைச்சாம். ‘வேண்டாம் இதுலேயே கிடப்போ’ ன்னு விழுந்தவம்தான் பிரேதமாத் தூங்கீட்டாம்! விளக்குகள்ளாம் பட்டப் பகல்போல் எரிஞ்சிக்கிட்டிருக்கு.

ரெண்டாஞ் சாமம் ஆகியும் அரச குமாரிக்குத் தூக்கம் வல்லெ. படுக்கையில பொறண்டு பொறண்டு படுத்துக் கெடக்கா. போன தோழிப் பொண்ணு அங்கெ அவங்கூட என்ன செய்தாளோ ஏது செய்தாளோ; ஒரு தாக்கலையும் காங்கலையேன்னு கிடக்கா.

அங்க அவங்கூடப் படுத்துக் கிடந்த தோழிப் பொண்ணுக்குந் தூக்கம் வல்லெ! பய அப்பிடியே மட்ட மல்லாக்கப் படுத்து சன்னக் குறட்டை போட்டு சொகமாத் தூங்கீட்டுக் கிடக்காம். கொஞ்ச தூரத்துல பெயலக் கண்காணிக்க கையில உருவுன வாளோட ஒரு ஆள் போட்டிருக்கு; பய ஆசைய அடக்குதானா இல்லையா ன்னு கவனிக்க.

தூக்கம் பிடிக்காத அரசகுமாரி வந்தா. பாத்தா; கொஞ்சம் பாத்துக்கிட்டே இருந்தா. முதக் காரியமா காவக் காரனெப் போகச் சொன்னா. தூக்கம் பிடிக்காம அவனையே பாத்து ஏங்கிக் கிட்டிருந்த தோழிப் பெண்ணவும் போகச் சொன்னா. கதவ அடைச்சா. அவங்கூடப் படுத்துக்கிட்டா.

மறுநா.

ஊரெல்லாம் பேசிக்கிட்டாங்க.

"வெங்கம் பயலுக்கு அடிச்ச யோகத்தப் பாத்தியா!"

## 4

ஒரு ஊர்ல ஒரு சம்சாரி இருந்தார். அவருக்கு ஒரு மகன். அவன் பெரியவனாகி, சம்சாரியத் தொழில்ல நல்ல கெட்டிக் காரனா கருக்கடையா இருந்தான். சம்சாரி அவனுக்கு பொண்ணு பாத்து கலியாணங் கட்டி வச்சார். பொண்ணுக்கு மருமகளுக்கு தொலைவட்டான ஊரு. இந்தக் காலம் மாதிரி நெனச்ச ஒடனே கார்லயோ ரயில்லயோ போக முடியாது. நடந்தேதாம் போய்ச் சேரணும். விதைப்புக்காலத்துல ஒருநா, மருமக ஊர்ல இருந்து முக்கியமான ஒரு விசேசத்துக்கு வரச் சொல்லிட்டுப் போனாக. நிலத்துல ஈரங்காயிறதுக்கு முன்னால விதைச்சி ஆகணும். அதனால மகன் போக முடியாது. மருமக கட்டாயம் போயி ஆகணும். ஒத்தையில அவள அனுப்ப முடியாது. துணைக்கு சம்சாரி மாமனாரு போனாரு.

நடந்தே போயிட்டிருந்தாக மாமனாரும் மருமகளும். மாமனாருக்கு "ஒண்ணுக்கு" நெருக்கிருச்சி. இதெ மருமககிட்ட

எப்படிச் சொல்லன்னு நினைச்சி "தாயி, நீ போயிட்டே இரு. நா ஒரு மூலிக புடுங்கிட்டு வந்துருதேம்"ன்னாரு. மருமக வெவரந்தெரிஞ்சவ. புரிஞ்சிக்கிட்டா. சரி மாமான்னுட்டு முன்னால நடந்துபோனா.

ஒருத்தர் ஒண்ணுக்குப் போனா அடுத்தாளுக்கும் இருக்கணும்னு தோணுமே ! அதனால அவளுக்கும் ஒண்ணுக்கு அடிக்கணும் போல உணர்ச்சி வந்திருச்சி. சரி; மாமனாரு பிந்துன இந்த நேரத்துலயே நாமளும் இருந்துருவோம்ன்னு எடத்தெப் பாத்தா. அறுப்பு முடிஞ்ச வயக்காட்ல உயரமான வரப்பு தெரிஞ்சது. அங்கன மறவாப் போயி உக்காந்துக்கிட்டு, யாரும் வாறாகளா. மாமனாரு வாராறாங்கிற கவனத்துலயே இருந்துக்கிட்டிருந்தவளுக்கு. நண்டு வளையில ஒண்ணுக்கு இருந்ததெ அவ கவனிக்கல.

வளைக்குள்ளெ வெதுவெதுப்பான மூத்திரம் போனதும் அந்தக் கிறுக்குப்பய நண்டு என்ன நெனச்சதோ தெரியல வேகமா வந்து இன்னொரு வளைக்குள்ள போறதா நெனச்சுக்கிட்டு இவளோட வளைக்குள்ளே புகுந்திட்டது!

பதறித் தட்டழிஞ்சிட்டா இவ நண்டெ எடுக்க விரலெ விட்டா. அது சனியன் உள்ளேயே போகுதே தவிர, வெளி வாற மாதிரித் தெரியல.

சின்ன நண்டுதாம்ன்னாலும் அது பண்ற பாதரவு இவள ரொம்பப் படுத்துது. குனியவும் உக்காரவுமா இருக்கா. என்ன செய்யிறதுன்னுட்டுத் தெரியல. மாமனாரு ஒண்ணுக்கு இருந்துட்டு வந்தாரு.

பாத்தா இவ வயக்காட்டோரம் உக்காந்து இருப்பது தெரிஞ்சது. நேரம் செங்கமங்கலாயிட்டு வருது. நடைய எட்டிப் போட்டாத்தான் ஊரு போயிச் சேர முடியும்.

மாமனாரு காத்திருந்து பாத்தாரு. இவ வாறதாத் தெரியல. கூப்புடு தூரத்துல மறைவுல நின்னுக்கிட்டு "என்ன தாயி வயித்தகியித்த வலிக்கா என்ன செய்யிது; ஏம் அங்கனவே நிக்கென்னு" கேட்டாரு.

என்னத்தெச் சொல்லுவா இவ. இந்த சங்கதிய எப்படிச் சொல்றது. சரி; சொல்லாமத்தாம் எப்பிடி இருக்கது.

மாமா, அது அதுன்னு இழுத்து நடந்ததெ ஒரு மாதிரி ஒரு ஓரையாச் சொன்னா. புரிஞ்சிக்கிட்டாரு.

சரி தாயி நீ அப்படியே நில்லு நா இந்தா வந்துட்டேம்ன்னு,

தலையில கட்டியிருக்க மேவேட்டிய எடுத்து உதறிக்கிட்டு வேகமாப் போனாரு.

போகுறப்போ, தாயி ஒண்ணும் பயப்படாதெ. அப்பிடியே பேசாம இரு. ஒரு நொடியில நா வந்துட்டேம்னு போனாரு. பக்கத்துல இருந்த தண்ணி வத்துன குட்டையில இறங்கி மேவேட்டிய விரிச்சி நாலு மீன் பிடிச்சாரு. அதெக் கொண்டாந்து அவட்டத்தந்து, இந்தா இதெ "அரை"க்குப் பக்கத்து வச்சி உக்காந்துக்க. மீன் வாடைக்கு நண்டு இறங்கி வந்துரும்ன்னாரு.

அதேபடிக்கு இவ இருந்தா. செத்தோடங் கழிச்சு அந்த நண்டு இந்த மீன் வாடைக்குப் பைய இறங்கி வந்துட்டு!

அப்பாடி; போன உசுரு திரும்பி வந்தது கெணக்க இருந்தது இவளுக்கு.

எந்திரிச்சு வந்து, சரியாய்ட்டதுன்னு சொல்ல, மாமனாரும் மருமவளும் ஊரு போயிச் சேர்ந்தாங்க.

●

இதுதான் அசல்க்கதை.

கேட்கிறவர்களுக்கும் மனசில் நிற்பது மருமகள் படுகிற ரசமான சங்கடம், கேள்விப்படாத புதிய செய்தி. மற்றொரு கேள்விப்படாத புதிய பரிகாரம்.

மனுச உடலுக்குள் எதிர்பாராமல் சில "உசுப் பிராணி"கள் நுழைந்துவிடும். காதுக்குள் சிலசமயம் எறும்பு நுழைந்து படாத பாடு படுத்திவிடும். அபூர்வமாக எப்பவாவது பூரான்குட்டி காதுக்குள் நுழைந்துவிடுவதும் உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

அட்டை வகைகளில் நீர் அட்டை என்று ஒருவகை. இவை சில குளங்களில் இருக்கும். இப்படி இருக்கும் குளத்துக்கு "அட்டைக்குளம்" என்றே மக்கள் பெயர் வைத்துவிடுவார்கள். (அட்டைக்குளம் வேற; அட்டுக்குளம் வேறெ!!) இந்தக் குளத்தில் பெண்கள் இறங்கிக் குளிக்கபயப்படுவார்கள். காரணம் இந்த நண்டு போன்ற கதைகள்தான். நீர் அட்டைகள் இப்படியான "கூத்தை"ப் பண்ணிவிடும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அசல்களையும் உள்ளதுகளையும் சொல்லிக் கொண்டிருந்தால் சுவாரஸ்யம் ஏது. மனுசப் பயலின் மனசுக்குள் கற்பனை என்றும் கதைகட்டுகிறது என்றும் பலது இருக்கின்றனவே!

இந்த நண்டுக்கதையைப் பல இடங்களில் பல பல மாதிரியாகக்

கேள்விப்படுகிறோம். அது சொல்லுகிற மனசு எதிரே இருந்து கேட்கும் மனசு இவைகளைப் பொறுத்தெல்லாம் மாறக்கூடியது!!

மீன்களைக் கொண்டு வந்து தரும் மாமனார் அவரே "வைத்தியமும்" செய்கிறார். மருமகள் கண்களை மூடிக் கொள்கிறாள். மீன் வாடைக்கு நண்டு இறங்கி வந்துவிடுகிறது. உணர்வின் மூலம் இதை மருமகள் அறிகிறாள். பார்த்துக் கொண்டிருப்பதன் மூலம் மாமனார் தெரிந்துகொள்கிறார்.

கதையை இத்துடன் முடித்துக் கொள்வதற்கு மனசில்லை சொல்பவருக்கு. மேலும் தொடர்கிறார்.

போனது ஒரு நண்டுதானா என்று கேட்கிறார் மாமனார். ஆமா ஒண்ணுதான் என்று அவள் சொல்லியிருக்கலாம். "அப்படித்தா தெரிஞ்சது" என்கிறாள். அதனால் மேலும் காத்திருக்கிறார்கள் இன்னொன்றின் வரவுக்காக. நண்டைக் காணோம். (இருந்தாத்தானே வர) ஆகவே மருமகள் கண்களை மூடிக்கொண்டிருக்கும் நிலையில் இவர் வேற நண்டு இருக்கா என்று பார்க்கிறார். கண்ணுக்குத் தெரியவா செய்யும். கைவிரல்களைக் கொண்டுதான் தேட முடியும். விரல்களுக்குத் தட்டுப்படவில்லை ஒன்றும்.

அதோடு விரலின் நீளம் போதாது என்று தெரிகிறது. ஆகவே அவர் எதை வைத்துத் தேடுவார் என்று சொல்ல வேண்டியதில்லை! மக்கள் தங்கள் சுவாரஸ்யத்துக்குத் தக்கபடியெல்லாம் கதை கட்டிச் சொல்கிறார்கள்.

கதைகளுக்கெல்லாம் அடிப்படை எப்பவும் நிசம் என்கிற ஒன்றுதான்.

## 5

ஒரு ஊர்ல ஒரு மகாப் பெரிய சோதிட நிபுணன் இருந்தான். எல்லாச் சோதிடர்களும், குழந்தை பிறந்த நேரத்தை வைத்து அந்தக் குழந்தை எப்பேர்ப்பட்டவனாக வருவான் என்று சொல்லுவார்கள்; இவன் அப்படியில்லை. எந்த வேளையில் ஒரு ஆணும் பெண்ணும் 'கூடி'னால் இன்னும் சரியாகச் சொல்வதென்றால், எந்த வேளையில் ஆணின் விந்து பெண்ணின் கருப்பைக்குள் போய்ச் சேருகிறதோ அந்த வேளையை வைத்துப் பிறக்கப் போகும் குழந்தையின் எதிர் காலத்தை ரொம்பச் சரியாகச் சொல்லி விடுவான்.

இந்த விசயத்தை வைத்து அவன் ஒரு ஆய்வு ஏடு தயார் செய்து கொண்டிருந்தான். அறுபது ஆண்டுகள் கொண்ட ஒரு வட்டத்தைப் பிரித்துக் கொண்டே வந்து ஒவ்வொரு முகூர்த்தத்துக்கும் இன்ன பலன் என்று எழுதிக் கொண்டே வந்த போது, இன்ன குறிப்பிட்ட நேரத்தில் சேர்ந்தால் உலகத்தை ஆளும் சக்ரவர்த்தியாகப் பிறப்பான் அந்தக் குழந்தை என்று வந்தது.

உடனே அதை நாமே பரிசோதித்துப் பார்த்தால் என்ன என்று தோன்றவே மனைவியைக் கூப்பிட்டு அந்த நேரத்தையும் அதன் பலனையும் சொன்னவுடன் அவளுக்கும் அப்படியான ஒரு ஆசையும் இணக்கமும் வந்துவிட்டது. அந்த நட்சத்திரத்தில் சேர இருவரும் ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தார்கள். அந்த நட்சத்திரம் மறுநாள் வருகிறது என்றால், முதல் நாளே இந்த ஜோதிடனை ராஜா அரண்மனைக்கு வரச் சொல்லி அவசரமாக சேதி சொல்லி அனுப்பினான். ராஜா ஆணையை மீற முடியுமா? "சரி; போய்ட்டு, நாளைக்கு திரும்பிறுதேம்" என்று சம்சாரத்திடம் சொல்லிவிட்டு புறப்பட்டுப் போனான். ராஜாவின் அரண்மனை ஆற்றுக்கு அந்தப்பக்கம் இருந்தது. போய், மறுநாள் சாயங்காலமே திரும்பிவிடலாம் என்பது இவன் கணக்கு. முதல்நாளும் மறுநாளும் ராஜா அவனை அங்கயே தங்க வைத்து சோதிட சம்மந்தமாகப் பேச ஆசைப்பட்டார். இவன் எவ்வளவோ சொல்லிப்பார்த்து மன்றாடி அவசரமான சோலி இருப்பதாகப் பொய் சொல்லி ஒருமாதிரி சமாளித்துப் புறப்பட்டான். ரண்டு நாள் கழித்து கட்டாயம் வந்து விடுவேன் என்று சொன்னதால், சரி என்று ராஜாஅவனுக்குப் பட்டு பட்டாடைகள் அணிகலன்கள் பொன் வைரம் என்று பல பரிசுகள் கொடுத்து அனுப்பி வைத்தான்.

சோதிடன் புறப்பட்டு ஆற்றங்கரையைப் போய் சேர்வதுக்குள் மழை பலமாகப் பிடித்துக் கொண்டது.

மழையில் நனைந்து கொண்டாவது ஆற்றங்கரைக்குப் போய்ச் சேரலாம் என்றால், பெய்ததோ கல்மழை! (ஆலங்கட்டி மழை) வெளியே தலை நீட்ட முடிய வில்லை.

நேரமோ ஆய்க்கொண்டிருக்கிறது.

மழை வெறித்ததும் புறப்பட்டு ஆற்றங்கரைக்கு வந்து பார்த்தால் வெள்ளம் கரைபுரண்டு பயங்கரமாக ஓடுகிறது.

ஓடக்காரங்களைக் கூப்பிட்டால், 'அய்யோ இந்த வெள்ளத்துலயா முடியாது முடியாது; கொஞ்சம் வெள்ளம்

வடியட்டும்' என்றார்கள். மழை திரும்பவும் கொட்ட ஆரம்பித்து விட்டது. சரி, என்ன ஆனாலும் சரிதான் நீந்திக் கரை சேந்துற வேடியதுதான் என்று துணிந்த போது, அந்தக் கரையில் ஒரு வேளார் (குயவர்) இருந்தார். அவர் இந்த சோதிடன் வந்ததிலிருந்து கவனித்துக் கொண்டே தான் இருந்தார். இவனுடைய ஆத்திரமும், அவசரமும் அவருக்கு வேடிக்கையாக இருந்தது.

சோதிடன் நீந்துவதற்குத் தயாராகி ஆற்றுக்குள் இறங்கப் போகும்போது வந்து கையைப் பிடித்துக் கொண்டு, "என்ன அப்படித் தலை போகிற காரியம்; உயிரைக் கொடுத்து அப்படிப் போய்த்தான் தீரவேண்டிய காரியம் என்னது?" என்று கேட்டார். சோதிடன் உண்மையைச் சொன்னான்; ராஜாவிடம் வாங்கிய பட்டு பட்டாடைகள் பரிசுகளையெல்லாம் காட்டினான். தாமசித்த நேரமில்லை. அந்த முகூர்த்தத்தை விட்டுறப்படாது என்றான்.

வேளார் ஒரு யோசனை சொன்னார். "நீரு இப்பப் போனாலும் சரியா நல்லபடியா போய்ச் சேருவீராங்கிறதே சந்தேகம். போய்ச் சேர்ந்தாலும் அந்த நேரத்துக்குள்ளெ வீட்டுக்குப் போக முடியுமாங்கிறதே சந்தேகம். ஒமக்கு அந்த நேரத்ல பிறக்கப் பிள்ளை வேணும். அவ்வளவுதானெ. ,எனக்கு ஒரு பேத்தியா இருக்கா. இப்பதாம் சடங்காகி இருக்கு. வீட்டுக்கு வா. அவ கழுத்துல ஒரு மஞ்சக் கயிறு பூட்டு. அந்த நேரத்திலயே சேந்து பிள்ளையப் பெத்துக்கொ" என்றார்.

இவனுக்கும் சரி என்று பட்டது. தனக்கு ஒரு உலகத்தை ஆளுற சக்ரவர்த்தி வந்து பிள்ளையாகப் பிறக்கணும். அது எந்தப் பொண்ணு பெத்தா என்னெ என்று நினைத்து சரி என்று வேளாளரின் வீட்டுக்குப் போனான். வேளார் பேத்தியக் கொண்டுவந்து காட்டினார். தனீ பாலாகவே சாப்பிட்டுக் கொழுத்துத் திமிர்ந்த கன்னுகுட்டி போல இருந்தாள் பேத்தியாள். ராஜாவிடம் வாங்கிக் கொண்டுவந்த பரிசுகளை கன்யாசுல்கமாக, பரிசம் போட்டு கழுத்துல மஞ்சக் கயித்தைக் கட்டினான். அவசரமாக "சாந்தி"க்கு ஏற்பாடாகியது.

அந்தப் பேத்தியாளுக்கு "உலகம்" ஒண்ணுமே தெரியாது. ஏதோ தாத்தா சொன்னார்; சரி என்று ஒப்புக் கொண்டாள். கழுத்தாகாத மாட்டை சம்சாரி வண்டியில் பூட்ட சங்கடப்படுவதுபோல் சோதிடனும் ரொம்ப அவஸ்தைப் பட்டான். மாட்டின் கழுத்தில் நுகந்தடியை வைத்தும் கூச்சம் தாளாமல் பிடறியை சுரித்து நுகந்தடியைக் கீழே தள்ளி விட்டுவிடும். கூச்சம் போவதற்கே பல நாட்களாகும்.

சோதிடனோ வேத்து ஆள். வந்ததும் வராததுமாக இவன் என்னெல்லாமோ செய்கிறானே, எப்படியெல்லாமோ நடந்து கொள்கிறானே என்று அவளுக்குச் சங்கடம். அதோடு அவள் உடம்பில் எங்கெத் தொட்டாலும் கூச்சம் தாள முடியலை அவளுக்கு. அப்படி ஒரு உடம்பு. சோதிடனுக்கோ அவசரம்; மூகூர்த்தம் தவறி விடக் கூடாது என்று. ஆத்தரத்துலயும் அவசரத்துலயும் அண்டாவுக்குள்ளேயே கை நுழையாது' என்று இருக்கும்போது சோதிடன் பாடு இதில் சொல்லவா வேணும், பாவம்.

அவனும் தனக்குத் தெரிந்த வித்தைகள் எல்லாத்தையும் செய்து பார்த்தான். ரொம்பவும் நெருக்கினால் கூப்பாடு போட்டு விடுவாள் போலத் தெரிந்தது. என்ன செய்வது என்றும் தெரியலை என்று சொல்லிவிட்டு கதை சொல்லிக் கொண்டு வந்தவர் இந்த இடத்தில் ஒரு விளக்கம் தந்தார். "அபூர்வமாக இப்படிச் சில பெண்களுக்கு கன்னித்தொலி கிழிபடாது சமானியமா. அதுக்குத்தான் முதல் இரவில் பால், பலகார பட்சணங்களோட ஒரு சிறிய கிண்ணத்துல கொஞ்சம் விளக்கெண்ணெய் தொட்டுத் தடவிக்கிட வைத்திருப்பார்கள். இது அவசரத்தில் ஏற்பாடு செய்த சாந்தி முகூர்த்தம். அதோடு பெண்கள் சேர்ந்து ஏற்பாடு பண்ணியிருந்தால் சரியாகச் செய்திருப்பார்கள். இந்தக் கிழவனார் வேளார் பண்ணியது. சரியாகப் பண்ணலை; நேரமும் இல்லை அதுக்கெல்லாம். இனியும் தாமதித்தால் முகூர்த்தம் போய்விடும் என்று அந்தச் சின்னப் பொண்ணை அந்தச் சோதிடன் வலுவந்தம் பண்ண, அவள் திமிற ஆகக் கூடி கடேசியா ஒரு பலனும் இல்லாமல் வீணாகப் போய்விட்டது.

மனசும் சோர்ந்து போனான் சோதிடன்.

அங்கே சோதிடன் வீட்டில் என்ன நடந்தது என்று சொல்ல வேண்டாமா?!

அன்று காலையிலிருந்தே சோதிடனின் மனைவிக்குப் புருசனை எதிர்பார்த்து எதிர்பார்த்து கண்கள் பூத்துப் போய் விட்டது. விசேடமான சாப்பாடெல்லாம் தயாரித்து, மெத்தை படுக்கையெல்லாங்கூட விரித்து வைத்துவிட்டு, அதே நினைப்பில், குட்டி போட்ட பூனை இடம் பார்த்துக் கொண்டு அலைவது போல அடுப்படிக்கும் வாசலுக்கும் படுக்கையறைக்குமாக அலைந்து கொண்டிருந்தாள். மழையோ விடாமல் சவட்டி எடுத்துக் கொண்டிருந்தது. சொன்ன

நேரத்துக்கு வரமுடியாது போனவர் அக் கரையில் மாட்டிக் கொண்டார் என்று தெரிந்து கொண்டாள். ஆகக் கடசியில் சோதிடர் சொன்ன நேரம் கழிந்து-விடும்போலத் தெரிந்த போதுதான் யாரோ ஒரு தடியன் தெப்பமாக நனைந்து கொண்டு இவளுடைய திண்ணை வந்து ஏறினான். மேல்த் துண்டு கூட இல்லை. ஒரே வேட்டி மட்டும் உடுத்தியிருந்தான். வீட்டுக்கதவு பூட்டியிருக்கும் தைரியத்தில் அவன் வேட்டியை அவிழ்த்து முறுக்கிப் பிழிந்தான். மழை கொட்டிக் கொண்டிருந்ததால் சோதிடனின் மனைவி கதவைப்பூட்டி விட்டு சன்னல் வழியாகப் புருசன் வருகிறானா என்று பார்த்துக் கொண்டிருந்தவளுக்கு யாரோ அந்நியன் வந்து-திண்ணையேறியதும் – மறைந்து நின்றுகொண்டு – அவனைக் கவனித்துக் கொண்டிருந்தாள். வேட்டியை அவிழ்த்து முறுக்கிப் பிழிந்தவன் தலையைத் துவட்டினான். தலையை அவன் ஈர வேட்டியால் மூடிக் கொண்டு தலை துவட்டும்போது இவளால் அவனை நன்றாகவே பார்க்க முடிந்தது. வயிறு ஒட்டி இருந்தது. கூப்பிட்டு சாப்பாடு கொடுத்தால் ஆவலோடு சாப்பிடுவான் என்று பட்டது.

உடம்பெல்லாம் துடைத்து முடிந்து ஈரவேட்டியையே உடுத்திக் கொண்டான். இன்னும் தாமதம் செய்தால் முகூர்த்தம் போய்விடும் என்று பட்டது அவளுக்கு. தனக்கு யார் மூலமாகவாவது உலகத்தை ஆளும் சக்ரவர்த்தி வந்து மகனாகப் பிறக்க வேண்டும். புருசனோ வருவதாகத் தெரியலை. நேரத்தை விட்டால் எப்பவும் கிடைக்காது. காலம் பொன்னானது. கதவைத் திறந்து அவனை உள்ளே அழைத்தாள்.

ஏன் ஈர வேட்டியோடு இருக்கெ என்று கேட்டு மாற்று உடை தந்து உடுத்தச் சொன்னாள். சுடச்சுட சாப்பாடு போட்டாள்.

அவன் உள்ளெ வந்ததுமே இவள் கதவை தாட்பாழ் போட்டதை வைத்தே இவன் தெரிந்து கொண்டான்; சாப்பாட்டுக்குப் பிறகு கீப்பாடும் கிடைக்கும் என்று.

அதுபோல் முகூர்த்தம் தப்பாமல் எல்லாம் நல்லபடியாக முடிந்தது.

மறுநாள் காலையில் ஆற்றில் வெள்ளம் குறைந்து, நிதானமானதும் படகில் ஏறி சோதிடனும் அவனுடைய புதுப் பெண்டாட்டியும் இங்கே வீட்டுக்கு வந்தார்கள். மனைவியிடம் நடந்த விபரத்தைச் சொன்னான். அதனாலென்ன; சரி என்று

சக்களத்தியை வீட்டுக்குள் சேர்த்துக் கொண்டாள் மனைவி.

சக்களத்திக்கு கடேசி வரைக்கும் பிள்ளை பிறக்கவேயில்லை. அவளை "இருசி" என்று சொன்னார்கள். ( பெண்ணுக்குண்டான சகல லட்சணங்களும் இருக்கும் ஆனால் போகம் மட்டும் செய்ய முடியாது. )

பத்தாவது மாசத்தில், சோதிடனின் மனைவி ஆண்குழந்தை பெற்றாள். நேரத்தை வைத்துக் கணித்துப் பார்த்ததில் இந்த உலகத்தையே ஜெயித்து அரசாள வேண்டிய சக்கரவர்த்தி தன் வீட்டில் பிறந்திருக்கிறது என்று அறிந்தான் சோதிடன். தனது ஆசையை ஞாபகத்தில் வைத்துநிறைவேற்றிய மனைவியை நினைத்து வியந்தான்.

## 6

சொக்கலிங்கத்தேவர் என்று ஒருத்தர் இருந்தார். ரொம்ப நாளைக்கு முந்தி. அப்பவே அவருக்கு நூறு வயசுக்கு மேலேயே இருக்கும் என்று சொல்லுவார்கள்.

அவரோடு ஒருநாள் பேசிக்கொண்டிருக்கும் போது நான் சுரைக்காய்க்கறி மட்டும் சாப்பிட மாட்டோம் என்று ஏதோ ஒரு காரணத்துக்காக தற்செயலாகச் சொன்னார். எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

'சோத்துக் கலைஞ்சவன் சோளச் சோறும் கறிக்கலைஞ்சவம் சொரைக்கா கறியும், என்கிற சொலவம் கேட்டிருக்கிறேன் ( வேற புகல் இல்லாதவன்தான் இதுகளைச் சாப்பிடுவான் என்பது ) இவர் சொன்ன தகவல் புதுசாக இருந்தது!

இதுக்கு ஒரு கதை இருக்கு என்று சொல்ல ஆரம்பித்தார்.

ரொம்ப ரொம்ப நா... ளைக்கு முன்னாடி; ஒரு காலத்துல. உலகம்பூராவும் ஏகமாய் வெள்ளம் பெருகிப் பிறவி உலகமே அழிஞ்சமாதிரி ஆயிட்டது. மக்களெல்லாம் செத்துப் போய்ட்டாங்க. அதுல ஒரு அப்பனும் மகளும் மட்டும் மலைமேல ஏறி தப்பிக்கப் பாத்தாங்க.

மலையவும் மூழ்கடிச்சிக்கிட்டு மேலே ஏறுது வெள்ளம். அந்த மலை மேல உச்சியிலே ஒரு உசரமான அரசமரம் இருந்தது. வெள்ளத்துக்கு பயந்த தகப்பனும் மகளும் அந்த மரத்து மேல ஏறுனாங்க. மழை அப்பவும் ஊத்திக்கிட்டே

மரத்தையும் மூழ்கடிச்சிட்டு வருது! என்ன செய்றது எப்படி உசுரத் தப்பிக்கிறதுன்னுட்டுத் தெரியல. சரி; நம்மோட கதையும் இத்தோட முடிஞ்சதுன்னு நினைச்சப்ப, அந்த வெள்ளத்துல் ஒரு பெரிய்ய சொரைக் குடுக்கை மெதந்து வருது. அந்த சொரைக் குடுக்கையிலிருந்து- நீளமான சொரைக் கொடியும் மிதந்து இவங்க கிட்டக்க வந்ததும் அத எட்டிப்பிடிச்சி இழுத்தாங்க. இழுத்ததும், அந்த சொரைக் குடுக்கையும் வந்தது. அதுல ஒரு ஓட்டை போட்டு அதுக்குள்ளாற போயி இருந்துக்கிட்டாங்க.

மழை மேலும் மேலும் ஊத்துது. இப்பொ வெள்ளத்துல அந்த மரமும் முங்கிரிச்சி. ஒண்ணுமே தெரியல. கண்ணுக்கு எங்கென கண்டாலும் தண்ணிக்காடாத் தெரியிது. குளுரு நடுங்குது. ஈரத்துணிகளக் கட்டிக்கிட்டிருக்க முடியல. அவுத்துப் போடுறதத் தவிர வழியில்ல. மேலெல்லாம் வெரைக்கி. ஒருத்தர ஒருத்தர் கட்டிப்பிடிச்சிக்கிட்டாக. மின்னலும் இடியும் தலையில விழுறாப்புல இருக்கு. பயத்துல சேத்துக் கட்டிப்புடிச்சிக்கிட்டாக. கட்டிப் பிடிக்க பிடிக்க குளிரு அடங்கி இதமா இருந்தது. உடம்புக்குள்ளெ சூடு வந்தது; சூடுக்குப்பின்னால் சொரணை வந்தது. உணர்ச்சி வந்தது. உணர்ச்சி மயக்கத்துல ஒருத்தர ஒருத்தர் அனுபவிச்சுக்கிட்டாங்க. பயத்துல இருந்து விடுபடறதுக்கு அவங்கள அறியாமலயெ இது அவசியமா இருந்தது. அவங்களோட துக்கம், தனிமெ இதெல்லாம் மறந்து கொஞ்சம் நிம்மதி அடைஞ்சாங்க.

அதுக்கும் பெறவு, வெள்ளம் கொஞ்சங் கொஞ்சமா வத்த ஆரம்பிச்சது. அப்பதாம் அவங்களுக்குத் தெரிஞ்சது. அந்த சொரைக் கொடி அந்த அதே அரச மரத்துல சிக்கியிருந்ததுனால இவுக அதே இடத்துல தாம் தரை இறங்கினாங்க. அது அந்த மரத்துல சுத்தலையின்னா எங்கிட்டாவது சமுத்திரத்துல போயி இறங்குனா என்ன செய்றது? தரை இறங்கனப் பெறவு அந்த மலையில தாம் ஒரு குகைக்குள்ளாற தங்கியிருந்தாங்க. உலகத்துல ஒத்தச் சனம் இல்லெ; அம்புட்டும் அழிஞ்சி போச்சி. இவுக ரண்டு பேருந்தான் மனுவா இருந்தாங்க.

அந்த மகளுக்கு அவளோட அப்பன் மூலமா ஒரு புள்ளெப் பிறந்துச்சி; ஆம்புளைப் புள்ளெ. அதுக்குப் பெறவு ஒரு பொம்பளைப் பிள்ளையவும் பெத்தாக.

கொஞ்ச நாக் கழிச்சி அந்த அப்பனும் மகளும் செத்துப் போயிட்டாக. மிஞ்சுனது இந்த அண்ணனுந் தங்கையுந்தான்.

அவுக வளந்து பெரிய புள்ளக ஆனாக. வனத்துல கெடச்சதெத் தின்னாங்க.

இந்த உலகத்துல இப்ப மனுவா இருக்கவங்க அத்தனை பேருமெ அவங்க மூலமா உற்பத்தியானவங்கதாம்.

அந்தச் சொரைக் குடுக்கையும் சொரைக் கொடியும் இல்லைன்னா இப்ப நாம கிடையாது. அதனாலதாம் நாங்க சொரைக்காயத் திங்கறதில்லெ. அதே போல தரையில சொரைக் கொடி கிடந்தாலும் அதைத் தண்டிப்போகவும் மாட்டோம். சுத்தித்தான் போறது என்றார் அந்த முதியவர்.

பைபிளிலும் பாகவதத்திலும் இதே போல் உள்ள கதைகளைப் படித்த ஞாபகம் வந்தது எனக்கு.

## 7

கதை சொல்லத் தொடங்கியதும் பெரியவருக்கு சிரிப்பாணி அள்ளியது. பேச்சு முதலில் நீர் முள்ளுச் செடி பற்றி வந்தது. நான் அதைப் பார்த்ததில்லை என்றேன்.

அய்யோ அது கெட்ட கழுதெயில்லா; அது பண்ணுன கூத்தக் கேளுங்க என்று தொடங்கினார் பெரியவர்.

“இப்படித்தாம் பாருங்க, எங்க ஊர்ல ஒரு ‘செவ்வாளப்பய’ சரியான வெடுவாச்சுட்டி. எருமெ மாட்ட மேய்ச்சுட்டு வந்து தண்ணியில அடிச்சாம்.

எருமக் களுதகெ தண்ணிக்குள்ள எறங்கினா சாமானியமா வெளியேறுமா சவம். அத வெளியேத்ததுக்குள்ள மனுசம் படுத பாடு...., குளத்து கரையில ஒத்தக் கல்லு காங்க முடியாது. சுத்தி சுத்திப் பெறக்கி எரும மாட்டெ எறியேதேம்ன்னு சொல்லி தண்ணிக்குள்ள வீசிக்கிட்டே இருந்தா எங்கனெ இருக்கும் கல்லு!

பெய நல்லா வேகமா நீஞ்சுவாம். எல்லாத்தையும் களைஞ்சு எரிஞ்சுட்டு, நாலு வெரல் அகலத்துல உள்ள கோமணத்த மட்டும் வச்சுக்கிட்டு தண்ணிக்குள்ள பாஞ்சாம். அந்த இடத்துல தண்ணிக்குள்ளார நீருமுள்ளுச் செடி இருந்தது அவனுக்குத் தெரியாது.

கோமணத்துல சுருக்குன்னதும் சுள்ளாஞ்சுருக்குதாம். (சுள்ளாஞ்சுருக்கு - துணிகளின்மேல் ஒட்டிக் கொள்ளும்

ஒருவகை புல்லின் விதை. துணியின் மீது ஒட்டிக் கொண்டு அசைவின் போது சுருக்கென்று உடம்பில் தைக்கும். இதனால் கெடுதி இல்லை; உபத்திரவம்தான்.) போலிருக்குன்னு நெனைச்சு கவனிக்காம வுட்டுட்டாம். இந்த நீர்முள்ளுச் செடியோட முள்ளு ரோமத்தை விட கொஞ்...சம் கனம்; அவ்வளவுதாம். மஞ்சள் நெறத்துல இருக்கும். பய நிறமும் மஞ்சள்; அதனால ஒண்ணுந் தெரியல சரியா. அதோட நல்ல வெளையாட்டுப் பருவம்; கக்கத்துலல்லாம் அப்பத்தாம் ரோமம் முளைக்கிற வயசுன்னு வச்சிக்கிடுங்களேம்.

ஒரு நளாச்சி, இரு நாளாச்சி, மூணு நாளு பொதுபொதுண்ணு வீங்கிருச்சி. கோமணம் வய்க்க முடியல! பெய மேலுக்கு குதுகுதுன்னு வந்துட்டு.

யாரிட்டக் காணிப்பாம், காணிக்கக் கூடிய எடமா? அண்ணைக்கி பெயலால மாட்டுக்குப் போக முடியலெ. இழுத்து மூடிப்படுத்துக்கிட்டு முக்கிக்கிட்டு மொனங்கிக்கிட்டும் கெடக்காம்.

ஏலே; எந்தி; தேரங்காணாதான்னு அவம் வீட்டுத்தாத்தா வந்து உசுப்புனாரு. தாத்தாகிட்ட கொஞ்சம் ஒட்டுதல் உண்டும் இவனுக்கு.

மெண்ணு மெண்ணு முழுங்கி ஒருபடியா இப்படி சங்கதின்னுட்டு சொன்னாம்.

எங்கலெ பாப்பம்னுட்டு பாத்தா... பெரிய மஞ்ச முள்ளங்கீக் கிழங்கு கணக்கா வீங்கிக் கிடக்கு! கண்ணாடியா மின்னுது.

அட பெயித்தியாரப்பயலே, ஆரம்பத்துலயே சொல்லப்படாதா; இப்பிடி வீங்கிப்போச்சே, உழுவ மீனு மாதிரியில்ல ஆயிட்டுன்னு சொல்லி, பெயல கட்டுல்ல படுக்க வச்சி, பக்கத்து ஊருக்குக் கொண்டு போனாவ.

பக்கத்து ஊருல, "பார்வை" பாக்குதவரு இருக்காரு. இவுக போன நேரம் அவரு இல்லெ. அவரோட சம்சாரந்தான் இருந்துச்சி. அந்தம்மாவும் "பார்வை" பாக்கும்.

வர்றவுகளுக்கு அவதான் பார்வை பாத்துக்கிட்டிருந்தா. இவனோ வெடலைப் பெய; பொம்பளையிட்ட எப்டிக் காண்பிக்கறதுன்னுட்டு தாத்தாவுக்கு யோசனை. சரி; என்ன செய்ய. ஆபத்துக்குப் பாவமில்லன்னுட்டு அவகிட்ட இப்பிடி இப்பிடி சங்கதி; நோக்காத்தண்டி ஆயிட்டது. நீங்கதாம் பாக்கணும்ன்னு சொன்னாரு தாத்தா.

அதுலயா முள்ளு குத்தியிருக்கு. அதா அப்பிடி வீங்கியிருக்கு; அப்படீன்னா நீங்க வேற ஆளத்தான் பாக்கணும்னு சொல்லிட்டா.

அம்மா தாயி ஒரு பக்கமும் தூக்கிட்டுப் போக முடியாது. இங்க கொண்டாந்ததே பிரயாச. உசுர்த்தலமில்லா; மத்ததுன்னாலும் பரவாயில்ல. நீங்கதாம் காப்பாத்தணும்னு கால்லெ விழாத குறையாக் கெஞ்சினாரு. அவ கிழவின்னாலும் குத்தமில்ல; கொஞ்ச வயசுக்காரி. கிழவனார் தாத்தா. சொன்னதுல இருந்து, மனசுக்குள்ள நோக்காத் தண்டியா....நோக்காத்தண்டியா ... அப்பின்னாப் பாக்கணுமே அதன்னு ஆசை!

சரி; கொண்டாங்கன்னா.

கட்டுலோட தூக்கீட்டு வந்தாங்க. பயலெப் பாத்தா. பாத்ததுமே பிடிச்சுப் போச்சி. சரி; இருக்கட்டும்னு நெனச்சி, தன்னோட கண்ணெ துணியால கட்டிக்கிட்டு அவனோட கண்ணையும் கட்டச் சொல்லிட்டு, வேப்பங் கொழைய சுழத்திவீசி வீசி மந்திரம் சொல்ல ஆரம்பிச்சா.

மந்திரம் வர்துக்கு பதிலா வாய்க்குள்ள நோக்காதண்டி நோக்காதண்டின்னுட்டுதான் வருது!

அய்யோ நோக்காதண்டியா அத நாம்பாக்கணுமே அத நாம் பாக்கணுமேன்னுட்டுதாம் மந்திரம் வருது.

ஒன்றமணிநேரம் வேப்பங்கொழை அடிச்சாச்சி; "மந்திரமும்" ஓதியாச்சி.

வீக்கக் குறைஞ்சிருக்கா; வலி நின்னிருக்கான்னு கேட்டா.

வீக்கமும் குறையல; வலியும் நிக்கலென்னு சொன்னதும், சரி இதுக்கு வேற பக்குவந்தான் செய்யணும். எல்லாரும் முதல்ல சத்தோடம் வெளியே நில்லுங்கன்னா. எல்லாரும் வெளியேப் போயாச்சு. கதவ ஒருச்சாச்சு வச்சிக்கிட்டா. தன்னோட கண்கட்டெ அவுத்துட்டு, ஒரு கோழி ரோமத்த எடுத்தா. வீங்குனதும்பேர்ல அப்படியே பட்டதோ படலையோன்னு மேலும் கீழுமா ரோசுனா. அந்த வலியிலேயும் பயலுக்கு அப்படியே சொகமா இருக்கவும் கொஞ்சங் கொஞ்சமா உசுருத் தலத்துக்கு உசுரு வர ஆரம்பிச்சது. விரிய விரியவும் செலம் தன்னப்போல ஒடஞ்சு வெளியேறவும் பெயலுக்கு வலிக்கவும் செய்யுது, சொகமாவும் இருக்கு. அப்பிடியே பெறத்தால கையிரண்டையும் கட்டில் சட்டத்துல ஊனிக்கிட்டு முக்குதாம் மொனங்குதாம்; மரி மோத்திரத்தெக் குடிச்ச கெடாக் கணக்க

சத்தங் கொடுக்காம்! வெளியில நின்ன தாத்தாவுக்கு வாயெல்லாம் பல்லு!! செலத்தோட முள்ளு வெளியில வாறது கணக்க அவருக்கு மனசுல தோணுது.

ஆனா இங்க செலந்தா வந்திருக்கு. முள்ளெக் காணம். முக்கா வாசி செலம் வந்துட்டதும் பெயலுக்கு வலி குறைஞ்சிட்டது. முள்ளெ இனி பிதிக்கித்தாம் எடுக்கணும். உயிர்த்தலத்தெப் பிதுக்கினாத் தாங்கமாட்டாம். திரும்பவும் கோழி ரோமத்தால தடவிக் கொடுத்தா. பிறவு அப்படியே நாக்கால தடவவும் பெயலுக்கு வலிக்கு சூடா ஒத்தனங் கொடுத்தது போல எதமா இருந்துச்சி. முள்ளு வர்ற மாதிரித் தெரியல. பல்லுபடாம பதனமா வலி தெரியாம இதமா சுவைச்சு உறிஞ்சு துப்புனா. சின்ன ரோமத்தண்டியில விழுந்து கிடந்தது. இப்ப எப்பிடி இருக்குன்னு கேட்டா.

சத்தெ தேவலன்னாம்.

எப்பிடித் தச்சது முள்ளுன்னு கேட்டா.

வெவரம் எல்லாத்தையும் ஒண்ணு விடாமச் சொன்னாம். ஒரு முள்ளுதாம் தச்சதான்னு கேட்டு எல்லாப்பக்கத்தையுமே பாத்தா. தாத்தா சென்னது சரிதாம்னு பட்டது.

இது விச முள்ளு. இன்னும் நாலு நேரமாவது மந்திரிக்கனும். போயிட்டு மூணாம் பக்கம் வான்னு சொல்லி, ஒருபச்சிலையை அறைச்சிப் போடுன்னு சொல்லிக் குடுத்தா.

இப்ப வலியில்லெ. சுப்புன்னு வந்திரிச்சின்னாலும் மூணாம் பக்கம் மந்திரிக்கப் போனோம்.

விசமுள்ளுல்லா. கூடவே நாலு தேரம் போயி மந்திரிச்சாம்.

மந்திரிக்க மந்திரிக்கத்தாம் தெரிஞ்சது நீர் முள்ளோட அருமை.

ஏலெ, கோமணத்த வச்சிக்கிட்டு தண்ணியில பாயாதலெ. கோட்டிக்காரப் பெயபுள்ள. கோமணம் பீ தாங்குமாலெ என்றார் தாத்தா.

## 8

ஆம்பளைகள்ளெ "பெண்டுகசட்டி" ன்னு இருக்க மாதிரி பொம்பளைகள்ளெ "ஆண்டுகசட்டி"யும் உண்டும். இப்பிடித்தாம்; ஒரு ஊர்ல ஒரு ஆண்டுகசட்டி இருந்தா. உதட்டோரம் பூனரோம மீசெ. இரும்பு ஒலக்கெ கணக்க கையி. காலெல்லாம் பொச பொசன்னு மயிரு. ஆம்பளையாப் பெறக்க வேண்டியது;

ரோமக்கணே தவறிப் பொம்பளையாப் பொறந்துட்டா.

நாலு ஆம்பள எதுத்து வந்தாலும் ஒத்தையில அடிச்சு வெரட்டீருவா. அம்புட்டு தெகிரியம்! பெறப்புதாம் இப்பிடி; மத்தபடி சொட்டைச்சொல் ஒண்ணும் சொல்லமுடியாது. மூக்கும் முழியுமா, நெஞ்சுக் கட்டும், பார்த்தா எவனும் அசந்துருவாம்.

ரொம்பப் பெரிய இடத்துப் பொண்ணு. ஒத்தைக்கு ஒரு பொண்ணு; வசதியான குடும்பம். அய்வேசு எல்லாம் இருந்து என்ன செய்ய. உரு பொம்பளையா இருந்தாப் போதுமா? சல்லிக் கட்டு காளைக் கணக்கா கெலிச்சிக்கிட்டு அலைஞ்சா எவம் வாக்கப்பட வருவாம்? வந்தாலுந்தான் எப்படி வச்சு "தாமரி"க்கிறது. தவ்வலான பெயலா வந்து அமைஞ்சுட்டாம்ன்னு வெச்சுக்க; ஒரு போடு போட்டான்னா பெய போயிச் "சேந்துரு" வாம். கலியாணம் எப்பொன்னு கேக்கிறவங்களுக்கு அவ ஒரு பதில் வச்சிருந்தா.

இங்க எவம் ஆம்பிளைப் பய இருக்காம்; நா நீட்டுற எங் கைய எவம் மடக்குதானோ அவந்தான் எம் புருசன்னு சொல்லிக்கிட்டே இருந்தா.

இந்த செய்தி வேகமாப் பரவிட்டு, ரோசமுள்ள ஆம்பிளைக சில பேரு வந்தாம் நீட்டு ஓங்கையென்னு; இந்தான்னு நீட்டுனா. பெயல்க முக்கித் தக்கி, முடியாம வேட்டிய நனைச்சிக்கிட்டதுதாம் மிச்சம்!

ஆக சுத்துப் பட்டிகள்ளெ எவனும் இவளுக்கு சோடி இல்லேன்னு ஆயிருச்சி.

பெத்தவங்களுக்குக் கவல.

நாளும் பொழுதும் கடந்தது. இவளோட கீர்த்தி நாலு இடத்துக்கும் பரவுது.

எங்க கண்டாலும் இதாம் பேச்சு; இதே பேச்சு. கடோசியில ஒரு குதிரைக்காரன் வந்தாம். சரியான "நரிக்குளிப்பாட்டி" அவம்! அடங்காத குதிரைகளையெல்லாம் தந்திரமாக அடக்கி வசக்கி சவாரி பண்ணுவாம். சரியான வஸ்தாவி; ஆள் ஜவான் மாதிரி இருந்தாம்.

விசாரிச்சு அவ வீட்டுக்கு வந்து சேர்ந்தாம் குதிரையில. அப்பங்காரன்ட்டெ நா உங்க மக சபதத்த நிறைவேத்தி வைக்க வந்திருக்கேம்ன்னான். அதுக்குமுன்னால நீங்க ஒரு வாக்குத் தரணும்ன்னான்.

என்னதுன்னு கேட்டாம் அப்பங்காரன்.

வேற ஒண்ணுமில்ல. கைய மடக்குதுக்கு முன்னால உங்க மக கையால எனக்கு சாப்பாடு பரிமாறணும்; நா அதெச் சாப்ட்டுட்டு பெறவு அவ கைய மடக்குதேம்ன்னாம்.

அப்பங்காரன் போயி மகள்ட்டக் கேட்டதும் அவளும் சரீன்னு ஒத்துக்கிட்டா.

குதிரைக்காரனுக்கு விருந்து தயாராகுது.

தலைவாழை இலை வருது.

இலையை விரிச்சி, நெடுக பதார்த்தங்க படைச்சாச்சு. சொம்புல தண்ணி மோந்து கொடுத்தா.

அவம் முகங் கைகால் கழுவுற சித்திரத்தையும் அழகையும் பாத்துக்கிட்டே இருந்தா.

கையக் கழுவும் போது கையவும் காலெக் கழுவும் போது காலெவும் முகத்தெக் கழுவும் போது முகத்தவும் பாத்துக்கிட்டே இருந்தா. வச்ச கண்ணெ எடுக்க முடியல. அப்பவே அவ உள்ளுக்குள்ள இருந்த வைராக்யம் உருக ஆரம்பிச்சுட்டு.

கொடுத்த கைத்துண்ட வாங்கி சிரிச்ச முகத்தோட தொடைச்சிக்கிட்டே இலை முன்னால உக்காந்தாம்.

இவ சாதத்தெப் பரிமாற வரும்போதே காலு பின்னலாடுது! சாதத்துல நெய் ஊத்துனா, கரண்டியால. போதுங்கற சைகை இடது கையினால செய்யிறப்ப இவங் கையி அவ கைமேல பட்டது. சாம்பார் ஊத்துனா. கரண்டியால கோரிகோரி விட்டுக்கிட்டே இருந்தா. நிறுத்தச் சொல்லி அந்தக் கையபுடிச்சாம். அந்தப் பிடி புல்லரிக்க வச்சது அவள.

எந்தப் பரபரப்பும் இல்லாம நிதானமா சாப்புட்டு முடிச்சாம். கடேசியா பாயாசம் விடும்போதும் அதுல நெய்விடும்போதும் அந்தக் "கூத்து" தாம். சாப்புட்டு முடிஞ்சது. வெத்திலைத் தட்டை கொண்டு தந்தா. வெத்தலை போட்டாம். செவச்செவண்ணு வெத்தலை அம்புட்டு அழகா புடிச்சிருந்ததுங்கிறதயும் அவ கவனிச்சிக்கிட்டா.

தயார்ங்கிற மாதிரி எந்திரிச்சு நின்னாம்.

எங்கே வா, ஒங்கைய நீட்டுன்னாம். அவ எந்திரிச்சு வந்தா. வர்றப்பவே ஒரு தட்டை தட்டி விழப் போனவள் ஓடிப்போயி தாங்கி சேத்துப் புடிச்சாம். ஆம்பள வாசமே தெரியாமலிருந்த அவளுக்கு வெக்கம் வந்து அவங்கிட்டே இருந்து விடுவிச்சிக்கிட்டு வீட்டுக்குள்ளாற ஓடியே போயிட்டா!

கதை சொன்னவர் இப்படிச் சொல்லி முடித்தார்.

நல்ல பூட்டுக்குத்தான் சாவிசேரும். "கள்ளப்பூட்டு" விழுந்துட்டா அதுக்கு சாவி கிடையாது. தென்னித்தான் திறக்கோணும் என்றார்.

## 9

கலியாணம் ஆகி ரொம்ப நாளைக்குப் பிறகும் ஒரு பிள்ளை பிறக்கலையேன்னு ரொம்பக் கவலைப்பட்டாங்க ஒரு புருசம்பெஞ்சாதி.

செய்யாத சாத்திரமெல்லாம் செஞ்சு பாத்தாச்சி. கோயில் கொளம், காசி ராமேஸ்வரம், தானதருமம், தோசம் கழிப்பு, நேமகம் இப்பிடி இப்பிடி.

இனிமெ பிள்ளெ கிடையாதுங்கறது தீர்மானமா தெரியிற சமயத்துல, பக்கத்து- மலையில ஒரு சாமியாரு இருக்காரு, பிள்ளெ இல்லாதவங்களுக்குப் பிள்ளெ வரம் கொடுக்காருன்னு கேள்விப்பட்டாங்க.

சரி; அந்தக் கொறையையும் ஏன் வைக்கணும்னு மலையேறிப் போயி சாமியாரு கால்ல விழுந்தாங்க. எந்திரிக்கச் சொல்லி சாமியாரு அவங்களப்பாத்தாரு. பாத்த பார்வையிலயே சொல்லிட்டாரு. ஒங்களுக்குக் கொழந்த பாக்கியம் கெடையாதுன்னுட்டு.

சாமி அப்படியெல்லாஞ் சொல்லப்படாது; எப்படியாவது எங்களுக்கு ஒரு ஆம்பளப்புள்ளெ இல்லென்னாலும் ஒரு பொட்டப் புள்ளையாவது தரணும்னு சொல்லி திரும்பவும் கால்ல வுழுந்தாங்க.

சாமியாரு பாத்தாரு. இதேதுடா சங்கட்டம்; வுடமாட்டாங்க போலிருக்கென்னு ரோசன பண்ணி, ஞானதிருட்டியில பாத்தாரு.

பாத்தா, அதுல ஒரு பொம்பளெ புள்ளெ தெரியுது. அழகுன்னா அழகுல்ல; பொம்பளெக்கு பொம்பள ஆசைப்படும்படியா அப்படியான ஒரு அழகு.

ஆனா, நடத்த சரியில்லாதவளாத் தெரியுது!

செ, போயும் போயும் இப்பிடியாப் பட்ட பொம்பளப்புள்ளையா இவுகளுக்குக் கிடைக்கணும்ன்னு, சாமியாருக்கு சப்புன்னு போச்சி.

அதுமாத்திரமில்லெ; அப்பிடி அவ பொழைச்ச அந்தப் பொழப்புல சம்பாதிச்ச காசுல இருந்துதாம், ஒருநா ஒரு பொழுதாவது இவுக சாப்புட்டுத் திரணும்ன்னு தெரிஞ்சுது.

அட, சே ; இதென்னடா சங்கட்டம்னு சாமியாரு ரோசனைக்கு மேல ரோசனை பண்ணுதாரு.

ம்... சரி. தலை எழுத்த யாரால அழிச்சி எழுத முடியும்; நடக்குறதுதாம் நடக்கும். நாம என்ன செய்ய அதுக்குன்னு நெனைச்சி.

இப்பிடி இப்பிடி சங்கதி. உங்களுக்கு பிள்ளெ வேணும்னா இதுபடிதான் நடக்கும்; இதுக்கு சம்மதம்னா சொல்லுங்கன்னு கேட்டாரு.

புருசனும் பொஞ்சாதியும் சத்தோடம் தனியாப்போயி ரோசன பண்ணுனாங்க. அப்டிப் பண்ணுனதில, எப்பிடியாபட்டப் பிள்ளையாய் இருந்தாலும் நமக்கு ஒரு புள்ளெ இருந்தாச் சரிதாம்னு தீர்மானிச்சு, சாமியாரிட்டெ போயி சரீ இருக்கட்டும்ன்னாங்க.

சாமியாரு ஒரு மாம்பழம் தந்தாரு; இத ஆளுக்குப் பேர் பாதியா சாப்டுட்டுப் படுங்கன்னுட்டு.

சொன்ன மாதிரியே பொம்பளப் புள்ளெ பிறந்தது. வளர்ந்தது.

வெளியில வுடாமெ அட்டஞ் சுளிக்காம அயக்காத்துப்படாம, அவள வளத்தாங்க. அவளும் வளர்ந்து சடங்கானா. சதா அவ பக்கத்துல, ஆள் மாத்தி ஆள் இருந்தாங்க; எங்க பெசகு நடந்துருமோன்னுட்டு.

அவளெ வீட்டெ விட்டு வெளிய வுடாமெ வீட்டுக்குள்ள ஒரு அறையில போட்டு பூட்டி வச்சாங்க. ஒருநா அவளுக்கு திடீர்ன்னு காச்ச வந்தது. காச்ச தாங்காம அவ செத்துப்போனா. அய்யோ இப்பிடி ஆய்ட்டதேன்னு வருத்தப் பட்டாங்க. அழுதாங்க, சொவத்துல முட்டிக்கிட்டாங்க.

என்ன செய்து என்ன பண்ண; அந்த அழகான பொண்ணு வம்பா செத்துப் போனா.

ஊருகூடி பாடைகட்டி அவள சுடுகாட்டுக்குத் தூக்கிட்டுப் போனாங்க. அந்த ஊரு சுடுகாடு ரொம்ப தூரம்: ஆத்துக்கு அங்கிட்டு இருக்கு.

போகுற பாதையிலயே திடீர்னு மழை பிடிச்சி அறைஞ்சிட்டது. கொள்ளி வைக்கக் கொண்டுபோன நெருப்புச்

சட்டியில் உள்ள நெருப்பெல்லாம் மழைத் தண்ணியில நனைஞ்சு நெருப்புக் கட்டியெல்லாம் அணைஞ்சு போச்சி. ஆத்தெக் கடக்க முடியல. வெள்ளம் அலமோதிக்கிட்டுப் போகுது. என்ன செய்யன்னுட்டுத் தெரியல. கொண்டு போன பிரேதத்த திலுப்பி வீட்டுக்குக் கொண்டாரக் கூடாது; தோசம். என்ன செய்ய? எல்லாரும் தெப்பமா நனைஞ்சி, வாட தாங்க முடியல. அங்க ஒரு காட்டு மண்டபத்துல பிரேதம்மட்டும் நனையாம எடுத்து படுக்கப் போட்டு வைச்சிட்டு காத்திருந்து பாத்தாங்க. மழை ஒழியறாப்பல தெரியல. நேரம் இருட்டிட்டது: ஆத்துல வெள்ளம் வத்துனாத்தாம் அக்கறையில உள்ள சுடுகாட்டுக்குக் கொண்டுபோக முடியும்.

என்ன செய்யன்னு யோசிச்சாங்க. சரி; விடிஞ்ச பிறகு வருவம். மழை ஓஞ்சிட்டா மேக்கொண்டு காரியம் செய்வம்; இப்போ பிரேதத்துக்குப் பக்கத்துல காவலா நாலு பேர் மட்டும் இருக்கட்டும்ன்னு போயிட்டாங்க. இவங்க நேத்து ராத்திரியில இருந்து சாப்பிடவுமில்ல; தூங்கவுமில்ல, பசியான பசியில்ல; ஆயாசமா வருது. குளுரு வாட தாங்க முடியல. குடிமகன்கிட்ட, எப்பா நாங்க ஒரு எட்டு வீட்டு வரைக்கும் போயிட்டு இந்த துணிகள மாத்திட்டு, போத்திக்கிட கம்பளியும் எடுத்துக்கிட்டு ஒரு நொடியில வந்துருதோம். நீ இங்க நில்லுன்னு சொல்லிட்டுப் பொயிட்டாங்க.

பாவம் குடிமகன் மட்டும் ஒத்தையில என்ன செய்வாம். அவனுக்கும் வாடை நடுக்குது; பசி தாங்கல, சரி; நாமளும் போயிட்டு சத்தோடத்துல வந்துரலாம்ன்னு அவனும் பொயிட்டாம்.

அவங்க எல்லோரும் போன சத்தோடத்துல மழை வெரிச்சிட்டது. நிலா பர்லாக்காயிது.

அந்த வழியா வந்த ஒரு வழிப்போக்கன் வந்தாம். போற பாதையில இந்த மண்டபத்துல சத்தோடம் உக்காந்துட்டுப் போவம்; பாலாக் காயிது நிலான்னுட்டுப் போனா அங்க ஒரு அழகான பொண்ணு படுத்து நிம்மதியாத் தூங்கீட்டு இருக்கா! அவளைப் பாத்ததும் அவனுக்கு ஆசைய அடக்க முடியல. பைய்ய, கிட்டப் போனாம். தொட்டாம். அவபேசாம இருக்கவும்.சரி தூங்குதாப்புல பாசாங்கு பண்ணுதான்னு நினைச்சிட்டாம். வெறிய அவனால அடக்க முடியாம, அந்த வெறியில அது பிரேதம்னுட்க்கூட பாக்காம, அவனோட ஆசையத் தீத்துக்கிட்டாம்.

அந்த இடத்த விட்டுப் போறதுக்கு முன்னாடி; தன்னோட ஆசையைத் தீத்தவளுக்கு ஏதாச்சும் தரணும்ன்னுட்டுப் பட்டது. அவங்கிட்ட இருந்தது கால் பணம்தாம். அத அவளோட முந்தியில முடிஞ்சுவச்சிட்டுப் பொயிட்டாம்.

மறாநாள்.

அவளுடைய தகனம் நடந்தது.

குடிமகன் அவளுடைய முந்தியில் தனக்குச் சேர வேண்டிய அளவு துணியை கிழித்துக்கொண்ட போது அந்த முடிச்சைப் பார்த்தான். வாய்க்கரிசியில் மிஞ்சியதை அப்பிடிக் கட்டியிருக்காங்களோன்னு நினைச்சி அதை வெட்டி ஆத்துக்குள்ள வீசிட்டாம்.

அந்த முடிச்ச ஒரு மீனு முழுங்கிட்டது. கொஞ்ச நாள் கழிச்சி அந்த மீன் ஒரு செம்படவன் வலையில விழுந்தது. அது விலை போச்சி.

அத வாங்குனது வேற யாருமில்ல; அந்த அவளோட அம்மாதாம்.

வாங்குன பெறவுதாம் தெரிஞ்சது; அரங்கு வீட்டுச் சாவி புருசங்கிட்ட இருக்கு, அவர் வர்றதுக்குத் நேரமாகும்ன்னுட்டு. அவரிட்ட துட்டுவாங்கீட்டுப் போயிதான் கறிமசால் வாங்கியாறணும். சரி; அரிஞ்சு கழுவி சுத்தப் படுத்திட்டிருப்போம், அதுக்குள்ள அவரும் வந்துருவாருன்னு மீனெ அரிஞ்சா. அதோட வயித்துக்குள்ள அந்த முடிச்சு இருந்தது. என்னதுன்னுட்டு அத அரிஞ்சிப் பாத்தா. அதுல கால்ப்பணம் இருந்தது.

அதுவும் சரிதாண்ணுட்டு மீனெ கைபாத்து மூடி வச்சிட்டு அந்த கால் பணத்துக்கு, வேண்டிய கறிமசாலா இதெல்லாம் வாங்கியாந்து கறிவச்சி, சோத்தெப் பொங்குனா.

காட்டுல இருந்து புருசங்காரம் பசியோட வந்து சாப்புட்டாம். அவளும் சாப்புட்டா. பெறவுதாம் யாவுகத்துக்கு வந்தது; கறிமசாலாவுக்கு துட்டுக்கு என்ன பண்ணுனன்னு.

உள்ளதெச் சொன்னா. மீனு வயித்துல இப்படி ஒரு துணிய முடிஞ்சமானைக்கி கால்பணம் இருந்ததுன்னா. இவனுக்கு அந்த சாமியாரு சொன்னது யாவுகத்துக்கு வரவும் அந்தத் துணிய எடுத்தான்னாம்.

கொண்டாந்து அதெ நல்லா கழுவிப்பாத்தா..., இறந்தன்னிக்கு மகளுக்கு உடுத்திவிட்ட பட்டுச் சேல! ஆனா அதுல இந்தக்

கால்பணம் எப்பிடி வந்தது? அவங்களால அதெ தீர்மானிக்க முடியாட்டியும், சாமியாரு சொன்னது மாதிரி தலையில எழுதுனது கணக்கத் தாம் நடந்திருக்கும்னு நெனச்சி பெருமூச்சி விட்டாரு.

## 10

ஆண் பிள்ளை ஒருத்தனுக்கு ரெண்டு "இது" இருந்தது. பிறவியிலேயே அவனுக்கு இப்படி அமைஞ்சிருந்தது. ரொம்ப அபூர்வந்தான் இது.

அஞ்சிதலை நாகம் ஏழுதலை நாகம் இப்பிடி இருக்கது போல அபூர்வமா இப்படி கோடியில ஒருத்தனுக்கு அமையுமோ என்னவோ.

இன்னொரு அதிசயம், அவனுக்கு அப்பிடி இருந்ததுனாலயோ என்னமோ ரெண்டு ஆள் பலமும் வீரியமும் இருந்தது.

ஒருத்தரு சொன்னாரு; இருக்கும்; ரெண்டு "இது" இருந்தா ரெண்டாள் பலம் இருக்கத்தானே செய்யும்! அவரு சொன்னது ஏடாசியா நெசமான்னு தெரியலைன்னாலும் எல்லாரும் சிரிச்சாங்க.

இப்பிடி இருந்ததுனால, அவனுக்கு "இருதலைமணியன்"னு பட்டப் பேரு ஏற்பட்டுப் போச்சி!

எல்லோரும் அவனெ ரொம்ப கேலி பண்ணுனதால அவம் ஊரெ வுட்டே காணாமப் போய்ட்டாம். ரொம்ப தூர ஊர்லபோயி, யாரும் முகந்தெரியாத இடத்துல போயி வேலசெஞ்சி பிழைக்கிறதுன்னு ஆயிட்டது.

அங்கெ யாருக்கும் இது தெரியாம இருக்கும்படியா பாத்துக்கிட்டாம்.

பய வளந்து இளவட்டு ஆனாம். பாக்கவும் லட்சணமா இருந்தாம்.

இப்பிடி இருக்கையில, அவனும் மனுசந்தானே, அவனுக்கு பொம்பளை ஆசை வந்தது.

வராதா பின்ன என்று கூட்டத்துல ஒருத்தர் சொன்னார்.

வேல செஞ்சி சம்பாதிச்ச பணத்துல கொஞ்சம் மிச்சம் வச்சி, ஒரு நா தேவிடியாக்குடி போனாம்.

அவ பாத்துக்கிட்டா இத!

அவளுக்கு இது அதிசயமா இருந்தது. வித்தியாசமா இருந்தது. அதனால அவ வெளியவுடாம ராத்திரிபூரா தங்கிட்டயே வச்சிக்கிட்டா அவன.

காலையில ஆத்துக்கு அவ குளிக்கப்போன எடத்துல தனக்கு வேண்டப்பட்ட சிநேகிதகாரிக்கிட்ட இதெ சொல்லிச் சொல்லி சந்தோசப்பட்டா.

சிநேகிதக்காரிக்கும் இப்படியாப்பட்ட காரியங்கள்ள ரொம்பப் பிரியம். அதனால அவ, நா இப்பவே ஓங்கூட வாரேம்;

நானும் அதெப் பாக்கேண்டாமோன்னு புறப்பட்டா. அவ அத பாத்து அனுபவிச்சுட்டு வந்து, அவ சேத்திகாரிக் கிட்ட நாலு பேத்துக்குச் சொன்னா.

ஆக, இப்பிடியே இந்த ரகசியம் தீயாப்பரவி இந்த விசயத்துல ரொம்பப் பிரியமான பொம்பளைகளுக்கெல்லாம் தெரிஞ்சி, பயலுக்கு ஒரே கிருக்கு ஆயிட்டு.

இருக்காதா பின்னெ என்றார் ஒருத்தர்.

இப்பெல்லாம் அவன் வேலைக்கே போறதில்லை.

சர்தான்; நம்ம விளையாட்டு வீரர்கள ஏதாவது ஒரு தொழிற்சாலையில வேலைக்குச் சேத்துக்கிடுதாங்க; அவங்க வேலைக்கா போறாங்க என்று கேட்டார் ஒருத்தர்.

அவனோட "சங்கதி" விசயம் அந்த நாட்டோட அரண்மன அந்தப்புரத்துக்குள்ளேயும் போயிட்டு. மகாராணிக்கு ரொம்ப வேண்டப் பட்ட ஒரு சேடிப் பொண்ணு பாத்து வந்து சொல்லீட்டா.

இப்ப மகாராணிக்கும் அதெப்பாக்கணுமென்னு ஆயிட்டது.

அந்த சேடிப் பொண்ணு மூலமாவே மகாராணி அவனுக்கு ரகசியமா தாக்கல் சொல்லி அனுப்பிச்சா.

அவம் பதறிப் போயிட்டாம். இதேதுடா சங்கட்டம்; வம்புல போயி மாட்டுவம் போலுக்கென்னு நெனச்சி அவகிட்ட ஏத்தா நீ என்னமொ ஆசெப்பட்டெ வந்தெ போனேன்னு இருக்காம இதெப் போயி அரண்மனையில மகாராணியிட்ட பத்தவச்சிட்டயெ. அப்பிடியாப்பட்ட இடத்துக்கல்லாம் நாம போவலாமா? அதுக பேன் எடுத்தாலும் எடுக்கும், காத அத்தாலும் அத்துருமே. என்னால முடியாது ஆத்தா, நா வர

மாட்டேன்னாம்.

நீ ஒண்ணும் பயப்பட வேண்டாம். மகாராணிக்கு இதுல எல்லாம் பிரியம் சாஸ்த்தி. ஒன்னெ 'பொன்னுங்கண்ணுமா' வச்சிக்கிடுவா. சும்மா வா; அங்கெ வந்துட்டே ராசாக்கணக்க இருக்கலாம்ன்னா.

ஏத்தா என்னெ ஆளவுடுன்னு; சொல்லிப்பாத்தாம்.

இந்தா பாரு இது மகாராணியோட ஆக்கின. நீ வல்லேண்ணா இப்ப ஒந்தலைக்கு கத்திதாம் காத்துக்கிட்டுக்கு. தப்பிக்க முடியாது பாத்துக்க. அங்க வந்து இருக்க ஒனக்கு என்ன கொள்ளெ. நல்...ல தின்னுட்டு பொலிகாள போல இருக்க வலிக்கா. மரியாதையா எந்திரிச்சி எம் பொறத்தால வான்னா. நல்ல ரோசிச்சிப் பாத்தாம். இங்க இப்பிடி அரையுங் கொரையுமா தின்னுக்கிட்டு இந்த முண்டெகக்கூட லோலுப்பட்டுக்கிட்டு இருக்கத விட அங்கன போயி ராசாக்கணக்க இருக்கலாம்னு தோணிரிச்சி. சரீன்னுட்டாம்.

பொண்ணு வேசம் போட்டு ராத்திரியோட ராத்திரியா சேடிப்பெண்ணு கூடவே ராணியோட அந்தப்புரம் போய்ச் சேந்தாம்.

அப்ப ராசா நகரத்துல இல்லெ. வேட்டையாடப் போயிருந்தாரு மலைக்கு. வேட்டையாடப் போனா அங்க கொஞ்ச நா தங்கி இருந்துட்டுத்தாம் வருவாரு. அதனால இங்க இவம்பாடு வேட்டையா இருந்துச்சி.

சாதாரண விசயமா இருந்தா பரவா இல்லாம இருக்கும்; இது அதிசயமான விசயமாச்செ. எப்பிடியோ பொட்டைச்சிக மத்தீயில கிசுகிசுப்பாயி இது இன்னொரு ராணிக்குத் தெரிஞ்சு போச்சி. அவளும் ராசாவுக்குப் பிரியமான ஒரு மகாராணிதாம்.

அவ மாத்திரம் என்ன நாம் பாக்கேண்டாமான்னு கேட்டனுப்பிச்சா!

நாம்பாத்துக் கொண்டாந்தது; நா வச்சிருக்கேம், ஒனக்கென்ன. வேணும்னா நீ பாத்து ஒண்ணெக் கொண்டாந்து வச்சியயேம்ன்னா.

அது என்ன, அம்புட்டு லேசாக் கிடச்சிருமா. அதெ எப்பிடிக் கண்டு புடிக்கது!

அதென்னமோ எனக்குத் தெரியாது. எனக்கு வேணும். அது எப்பிடித்தாம் இருக்குன்னு நாம் பாக்கணும்ன்னு சொல்லி அனுப்பிச்சா அந்த ராணி.

இப்டியே இவுகளுக்குள்ள ஒரு எசலிப்பு ஏற்பட்டு, ராசா வேட்டையிலிருந்து திரும்புறதுக்கு முன்னாடி அவரு காது வரைக்கும் போயிட்டது சங்கதி. ராசாவுக்கு கோவமான கோவமில்லெ; அண்ட கடாரம்முட்டிப்போச்சி.

தாயோளிது, ஏம் அரமனைக்குள்ளாற வந்து அப்பிடி ஒரு புய வந்து இருக்க அவனுக்கு என்ன அப்டி ரெண்டு "இதா" இருக்குன்னு கேட்டாரு.

ஆமா மகாராசா அப்பிடித்தாம் கேள்வி; ரெண்டுதாம் இருக்காம்ன்னாங்க.

செ, இது மோசக்கேடில்லா வந்து சேந்திருக்கு. அவனெப்புடுச்சி அப்பிடியே... அதுல யானைய வுட்டு மிதிக்க வச்சிக் கொண்ணுடுங்கன்னு ஆக்கின சொல்லி அனுப்பிச்சிட்டாரு.

இது எப்படியோ மகாராணிக்கு வேண்டியவன் ஒருத்தன் அங்கிருந்து ரகசியமாச் சொல்லி அனுப்பிச்சி, "இருதலைமணியனை" தப்பி ஓடிப் போகச் சொல்லீட்டா ராணி.

பயல் எங்க போனானோ தெரியல; தலை மறைவாயிட்டாம். ஏதோ வேல செஞ்சி பெழைக்க முடிஞ்சதே தவிர, முந்திய மாதிரி பொம்பளைக்கிட்டப் போயி "நல்லாப்பொல்லா" இருக்க முடியல; இருந்தாத்தாம் தெரிஞ்சி போகுமெ.

ராசா முரசு அறைஞ்சி தேசம் பூராவும் அறிவிச்சிட்டாரு. இன்ன மாதிரி அடையாளமுள்ள இளந்தாரிப் பயலைப் புடுச்சி யாரு தர்றாங்களோ அவர்களுக்குப் பதினாயிரம் களஞ்சிப் பொன் தர்றதாக!

வேலை செய்ய மாச்சப் பட்டவனெல்லாம், மந்தை சந்தை வெளிக்கிருக்குத இடம் இப்பிடி எவனுக்கு ரண்டு இது இருக்குன்னு தேடிக்கிட்டு அலையுதாங்க.

சும்மாவா; பதினாயிரங்களஞ்சி பொன்னுல்லா!

இந்தப் பய யாரு கண்ணுலயும் காங்காம அலைஞ்சி திரிஞ்சதுல உடம்பு பூரா முடி காடா வளந்து போச்சி. ஒருநா ஒரு நாசுவங்கிட்டப் போயி, ஏடே, எனக்கு உடம்புச் சவரம் பண்ணனும், நா ஆத்துல இந்த இடத்துல மரத்துக்குக் கீழ இருக்கேம். வந்து செஞ்சயனா ஒனக்கு ஒரு களஞ்சிப் பொன்னு தருவேம்ன்னு சொல்ல, நாசுவனும் சரி; போங்க வர்ரேம்ன்னாம்.

இவம் போயி மரத்து எணல்ல மறைவான இடம் பாத்து

மணல்ல "ஒண்ணைப்" பொதைச்சு வச்சி உக்காந்துக்கிட்டு இருந்தாம்; அடையாளம் தெரியாம இருக்கதுக்காக நாசுவம் கிண்ணத்துல தண்ணி எடுத்துக்கிட்டு வந்து எதுர்க்க, மணல்ல உக்காந்துக்கிட்டு தண்ணிய விட்டு நல்ல தேச்சிக்கிட்டு இருந்தாம். பயலுக்கு 'பாத்து' ரொம்ப நாளாச்சி. அதுலேயும் வேத்துக்கையி பட்டதும் தேச்சதுமாச் சேந்ததும், மணலுக்குள்ள தெரியாம இருக்கப் பொதைச்சி வச்சிருந்தது படார்னு வேகமா எந்திரிச்சதுல நாசுவங்கண்ணுல மணலு விழ, அவம் சத்தம் போட்டு யப்பா, நீருதானா- அது! ன்னு கேட்டுட்டாம்.

பிடிச்சானே ஓட்டம்.

யய்யா, எனக்கு கண்ணுல மண்ணு விழுந்தாலுங் குத்தமில்ல. பதினாயிரங் களஞ்சி பொன்னு வேண்டாம், அந்த ஒத்தக் களஞ்சி பொன்னாவது குடுத்துட்டுப் போரும்ன்னு இவம் பெறத்தாலயே ஓட, அங்க ஆத்துல குளிச்சிட்டு வேட்டியக் காயப்போட்டுட்டு இருந்தவங்கள்ளாம் என்ன ஏதுன்னு கேக்க,

அய்யோ போகுதெ பதினாயிரங் களஞ்சிப் பொன்னு போகுதேன்னு இவம் கூப்பாடு போட, அங்கே ஒரே அவக்காடு ஆயிட்டு.

"பெறகென்ன; போவம் போவந்தாம்.

ராசா அவனேத் தேடிக்கிட்டுதாம் இருக்காரு. ராணியும் தேடிக்கிட்டிருக்கா!

பாத்தாச் சொல்லுங்க. பதினாயிரம் களஞ்சிப் பொன்னு கெடைக்கும்.

## 11

கீச்சுக் குரல் 'கிட்டானும் நானும் ஒருநாள் தாத்தாவிடம் ...ரைமரத்து நிழலில் உட்கார்ந்து சாவகாசமாய் பேசிக் ...காண்டிருந்தோம்.

அப்போது எங்களுக்குத் தெரிந்த இருவர்– தம்பதியர் ...ரிலிருந்து இறங்கிப் போனார்கள். அதில், ஆண் ரொம்ப ...ரம். சரியான இடிதடியன். "ஆவி" போன்ற ராட்சச உடம்பு. ...வனுடைய சம்சாரமோ ரொம்பக் குள்ளம்! கொஞ்சம் ...கைப்படுத்திச் சொல்வதென்றால், அவனுக்கு அவள் ...ங்கால் உசரத்துக்குத்தான் இருப்பாள். அதோடு ஒல்லியாக ...ம இருந்தாள்.

அவர்கள் எங்களைக் கடந்து கொஞ்ச தூரம் போனதுமே கிட்டானுக்கு ஒரு சந்தேகம் வந்துவிட்டது! கிட்டானுக்குள்ள சந்தேகங்கள், கணக்கே கிடையாது. "கடவுள் புண்ணியத்தில் "தாத்தா என்று ஒரு ஆள்கிடைக்கப் போயிதான் பிழைத்தான்.

என்ன தாத்தா; என்ன இது. இப்பிடி இருந்தா "கதெ எப்பிடி நடக்கும்? என்று அவர்களைக் கண்ணாலேயே சுட்டிக்காட்டி தனது சந்தேகத்தைக் கேட்டான்.

வழக்கம் போல தாத்தா தனது பெரிய வெள்ளை மீசைக்குள் சிரிப்பது தெரிந்தது. இதுல ஒண்ணும் பிரச்சனெ இல்லெப்பா; "சர்க்காரு காரியம் தானா நடக்கும்" என்று சொலவடையைச் சொல்லி நிறுத்தினார்.

என்னது; தானா நடக்குமா. சர்க்காரு காரியம் தானா நடக்கும்ங்கிறது சரி. இது அப்படி இல்லையெ என்றான்.

ஆட்டுக்கு வால அளந்துதான் வ்ச்சான் ங்கற மாதிரிதான் தம்பி இதுலயும். பொம்பள இதெ நீ என்னென்னு நெனச்செ; என்று சொல்லிவிட்டு அவர் சுண்டு விரலை தனது மூக்குத் துவாரத்துக்குள் விட்டுக் காண்பித்து விட்டு பெருவிரலையும் விட்டுக் காண்பித்தார்!

கிச்சானுக்கும் எனக்கும் சிரிப்பை அடக்க முடியவில்லை. தாத்தா தொடர்ந்தார். அஞ்சி விரலும் ஒண்ணு போல இல்லன்னாலும் மூக்குக்கு அது ஒண்ணு போலத்தான் என்று சொல்லிவிட்டு, ஒனக்கு ஒரு கதெ தெரியுமாடெ என்று கேட்டார்.

என்னா கதை.

சுண்ணாம்பு குறிபோட்ட மாமனாரோட கதெ.

தெரியாதே சொல்லுங்க தாத்தா.

இப்பிடித்தாம் ஒரு ஊர்ல, "ஒனக்குத்தொணைக்குப்போன" ஒரு மாமனாரு இருந்தாரு. ரொம்ப நாளாக் கொழந்தையே இல்லாம இருந்து ஒரே ஒரு கொழந்த ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணுன்னு கருவேப்பலக் கொழுந்து போல ஒரு பொட்டப் புள்ளெப் பிறந்தது. அந்தப் பொட்டப் பிள்ள பேர்ல அவருக்குப் பிரியமான பிரியமில்லெ; கீழெ இறக்கி விட மாட்டாரு. எப்ப பாத்தாலும் கொரங்கு குட்டிய ஒட்ட வச்சிக்கிட்டு அலையுதாப்புல, இடுக்கிக்கிட்டே அலையிவாரு. சர்வகேலி பண்ணுவாங்க அவரெ. கொஞ்சம் கீழே இறக்கி விடும்வே; நடந்து பழகட்டும். நடக்கிறதையே மறந்து போயிடப்

போறா! என்பார்கள்.

எத்தினி நாளைக்குத்தாம் இப்பிடி பொட்டப்புள்ளய தூக்கி வச்சிக்கிடுவீருன்னு பாப்பம் என்று சவால் விடுவார்கள்.

என்னிக்கிருந்தாலும் ஒருத்தனுக்கு கட்டிக் கொடுக்கத்தானெ போறீரு.. நாளைக்கு அவம் கூட்டிட்டுப் போன பிறகு என்ன செய்வீரு?

"வீட்டோட மாப்பிள்ளை" க்குத்தான் கொடுப்பாரு.

"வீட்டோட மாப்பிள்ளை" க்குத்தான் கொடுப்பாரு. ஆனா பொண்ணைத் தொட விட மாட்டாரு!

என்ன கோட்டாப் பண்ணுனாலும் ஆள் கிணுங்க மாட்டாரு.

அந்தப் பொண்ணோட பிறவிக் கூறோ என்னமொ தெரியல, வளர்ச்சியே இல்லெ. நரம்புபோல இத்துணுங்காணும் கன்னுக்குட்டி போலத்தாம் இருப்பா. இதுல செல்லமான செல்லமில்ல. ரொம்ப பிடிவாதம்.

எத்தனெ நாளைக்குத் தான் பொம்பளப்புள்ளெ அப்டியே இருப்பா. வயசுக்கு வந்துட்டா. இனி மாப்புள்ளெ பாக்கணுமெ. "ஊரு ஒலகமெல்லாம்" சுத்தி யடிச்சுப் பாத்தாரு.

சின்...னப் பொண்ணுக்குத் தக்கன சின்...ன மாப்பிள்ளையாப் பாத்தாரான்னு கேட்டான் கிட்டான்.

நீ ஒண்ணு; சின்ன மாப்பிளையாப் பாக்கல அவரு. சின்ன சக்கரையுள்ள மாப்பிள்ளையாப் பாத்தாரு!

அதெப்படித் தாத்தா பாக்க முடியும் என்று கேட்டோம்.

அட; என்னப்பா, நீங்க கூறுகெட்டப் பிள்ளகளா இருக்கீக. மந்தையில, கொல்லையில வெளிக்கிருக்கிறபோது, குளத்துல கிணத்துல "காலு" களுவுறபோது இப்பிடித்தாம் பாக்கணும் என்றார் தாத்தா சிரிக்காமல்.

சரி கதை தானெ என்று நாங்களும் தாத்தா சொன்னதை ஏற்றுக் கொண்டோம்.

ஒருநா,

நல்..ல மார்கழி மாசம்; குளிரு காலையில. கிணத்துக்கு மாமனாரு குளிக்கப் போனாரு. அந்தக் கிணத்துக்குப் படிக்கட்டு கிடையாது. முக்கு வழியா கல்லுக இடையில கால அகட்டி வச்சித்தான் இறங்ஙணும், ஏறணும்.

இவரு போன சமயத்துல கூட்டமே இல்ல. ஒருத்தன் தான் குளிச்சிக்கிட்டிருந்தாம்.

செங்க முட்டிய கல்லுல ரோசி இவரு பல்லெத் தீத்திக்கிட்டு உள்ளெ இறங்கினாரு.

இவரு உள்ளெ இறங்கினதும் அவம் குளிச்சி முடிச்சிட்டு ஈர வேட்டிய மடிச்சுக் கட்டிக்கிட்டு மேலே ஏறுனாம். கீழே இருந்தவரு தற்செயலா மேலெ பாத்தாரு; ஆச்சரியம் புடிபடல! இந்தப் பயலெத்தானெ அவரு இத்தன நாளா தேடிக்கிட்டிருந்ததெ!! அட பாவிப்பயலே; தேடி அலைஞ்ச மூலிகைக் கொடி காலுல வந்து சிக்குனது கணக்கவில்லே, இருக்கு ன்னு சந்தோசப்பட்டுகிட்டு, அவனெக் கூப்புட்டு வெக்கத்த விட்டு உள்ளதெச் சொன்னாரு. தன்னோட ஒரே மகளெக் கட்டிக்கிட்டு வீட்டோட மாப்பிள்ளையா இருக்கச் சொன்னாரு. அவன் ரொம்ப "பாவப்பட்ட" (ஏழை) பையன். தேடிவர்ற சீதேவிய ஏன் விடணும்ன்னு, நீங்க என்ன சொல்லுதீகளோ அதெக் கேக்கம்ன்னு உறுதி சொன்னாம்.

கலியாணம் முடிஞ்சது. அது மட்டும் முடிஞ்சாப் போதுமா. "வெள்ளோட்டம்" பாக்கேண்டாமா. அந்த "முத இரவு"க்கும் ஏற்பாடு ஆச்சி. மக சந்தோசமா இருந்தா. பாவம் மாமனாருக்குத்தா நெல கொள்ளல; மனசு பதக் பதக்குங்கு.

என்ன இருந்தாலும் பய இளவட்டமில்ல; ஒரு நேரங்கணக்க ஒரு நேரம் இருக்குமா. ஏதொண்ணுக்கும் பயலக் கூப்டு இன்னொருக்க எச்சரிக்கெ பண்ணிறணும் ன்னு, மருமகப்பயல தனியாக் கூப்ட்டு எய்யா, அவ பச்சப்புள்ளெ, வலி பொறுக்க மாட்டா. எசக்கேடு ஆயிட்டதுண்ணா எம் மனசு பொறுக்காது பாத்துக்கொ. எதுலயும் பதனம் வேணும்.

கை பதனம்

வாய் பதனம்

சுசுனம் பதனம் அப்பிடீன்னு நம்ம பெரியாட்க சொல்லியிருக்காக.

இப்பிடி யெல்லாஞ் சொல்லிட்டு மேக்கொண்டு என்னத்தப் பேசன்னு அவரு தெகைஞ்சி நிக்காரு.

சரி மாமா, நீங்க போங்க. கவலைப் படாதீங்க. மத்ததெ நாம் பாத்துக்கிடுதேம்ன்னு மருமகன் சொல்றான். மாமனாரு நகளமாட்டேங்கறாரு.

நீங்க இப்பிடி செத்த வாங்க மாப்ளென்னு தனிய அவனேக் கூட்டீட்டுப் போயி, கோமணத்தை அவுக்கச் சொல்லி, அதுல கண்ட பாதியில சுண்ணாம்புக் குறி போட்டு, இதாங் கணக்கு.

இதுக்கு மேல ரோமக்கண போகப்படாது ன்னு சொல்லீட்டாரு.

சரி மாமா அப்பிடியே செய்றோம்னு ஒப்புத்துக்கிட்டாம். ஆனாலும் அவருக்கு மனசு கேக்கல; பெத்த அப்பன்லா! அதனால அவரு என்ன பண்ணுனாராம் ... குலுக்கைக் ( குதிர்) குள்ளாற இறங்கி அதுல ஒரு ஓட்டை போட்டு அது வழியாப் பாத்துக்கிட்டிருந்தாராம்; பயல் நாம சொல்றபடிதான் செய்தானா, அத்து மீறுதானான்னு பாக்க!

கிட்டான் "கீ..." என்று வினோதமான ஒரு குரலில் சிரித்தான்.

இந்த இடத்தில் தாத்தா கதையை நிறுத்திவிட்டு பொடித்தடையைத் தேடினார் பொடி போட. என்னத்த எளவு; சரியான கட்டத்துல கொண்டாந்து கதெய நிறுத்திக்கிட் டு. அந்தா இருக்குல்லா பொடிபட்டெ என்று வேகமாக எடுத்துக் கொடுத்தான்.

தாத்தா பொடியை எடுத்து பல்லுல இளுகிக் கொண்டு முகத்தை பாவம் போலவைத்துக் கொண்டு அமைதியாக இருந்தார். முந்தியே எனக்கு இந்தக் கதை தெரியும் என்பதால் நானும் கம்மென்று இருந்தேன்.

கிட்டானுக்குப் பொறுக்க முடிய வில்லை. என்னையும் தாத்தாவையும் மாறி மாறிப் பார்த்தான்; கதை முடிந்து விட்டதா என்பது போல்!

நாந்தான் சொன்னேன் அவனுக்கு சைகையில்; அவ்வளவுதான் முடிந்தது என்று; வேடிக்கைக்காக.

என்ன தாத்தா என்று சத்தம் போட்டுக் கேட்டான்.

மூக்குலெ பொடி போட்டால் உடனே பேசலாம்; பல்லுல போட்டால் எப்படிப் பேசறது. பொடி நமத்து ஈரமாகி அரிப்பு எடுத்த ஈருகளில் படிந்து நமநமப்பைப் போக்க கொஞ்சம் நேரம் கொடுக்க வேண்டாமா. இந்தக் கிட்டான் 'ஆக்கப் பொறுத்தவம் ஆறப் பொறுக்க மாட்டேங்கனே. கதை முடிவைத் தெரிந்து கொள்ள அவன் படுகிற தவுதாயம் தாத்தாவுக்கு சிரிப்பைத்தான் வரவழைத்தது.

என்ன தாத்தா பேசாம இருக்கீக: அப்புறம் என்ன ஆச்சி என்று கீச்சு குரலில் கேட்டான்.

என்னத்த ஆகும்; அவ அப்பன் பயந்தது போல ஒண்ணும் ஆகல. வயத்து பசிக்காரிக்கு அரை வயத்து சோறு பத்துமா. இன்னும் இன்னும் ன்னு கேக்கா அவ. இதுக்கு மேல கெடையாது; ஒங்க அப்பன் போட்ட உத்தரவுன்னாம். ஆம;

அவரு கண்டாரு. ஓம்ம சோலிய நீரு பாரும்ன்னா.

குலுக்கைக்குள்ள இருந்த அப்பனுக்கு அப்பதாம் உறைச்சது மூளையில. செ, குடி கெட்டுப் போச்சி; நாம நெனச்சது கெணக்கா இல்லெ. நம்ம கணக்கு தப்பா போச்சின்னு அப்பதாம் தெரிஞ்சிதாம் அந்த புத்திகெட்ட அப்பனுக்கு என்று சொல்லி முடித்து விட்டு,

யாருக்கு எம்புட்டு வேணுங்கறது அவுகவுக பாத்துக்கிடுவாக; அந்தக் கவல நமக்கு வேண்டாம் என்றார்.

## 12

"கிறுக்கு" ராஜா சாமியாரு ஆன கதை தெரியுமா என்று கேட்டுவிட்டு சொல்ல ஆரம்பித்தார் தாத்தா. ஒரு ஊர்ல ஒரு ராஜா இருந்தாரு. அவருக்கு கலியாண வயசுவந்த பிறகும் கல்யாணம் கட்டிக்கிடல.

அப்பிடிக் கட்டிக்கிடாததுக்கு என்ன காரணம்ன்னு மந்திரிகள்ளாம் கேட்டாங்க.

எனக்கு என்னோட அம்மா மாதிரியான பொண்ணு வேணும்.

2 பிறந்த மேனியா வந்து எனக்கு அவ பால்தரணும். (முலை ஊட்டணும்). அப்பிடி வர்றவளைத்தான் நா கலியாணம் கட்டுவேம்ன்னாரு.

மந்திரிமார்களுக்கு, இது நடக்கிற சங்கதியாத் தெரியலைன்னாலும் ராஜாவோட நெனப்பை நாடு பூராத்துக்கும் தெரியப்படுத்துனாங்க. இதுக்குப் பெறகுதான் அந்த "கிறுக்குராஜா" ங்கற பட்டப் பேரு அவருக்கு வந்தது!

---

2 பிறந்தமேனியா

கதை சொல்லிகள் இரண்டு விதமாகச் சொல்லுகிறார்கள்

அரசனே பிறந்த மேனியாக இருந்துகொண்டு அம்மாவிடம் குழந்தை பால் குடிப்பது போல என்றும் தன்னைத் திருமணம் செய்துகொள்ள வரும் பெண்ணை நிர்வாணமாக வந்து தனக்கு முலையூட்ட வேணும் என்றும் இருவகையாகச் சொல்லப்படுகிறது.

அந்த ராஜா பெறந்த ஒடனே அவரோட அம்மை செத்துப்போனா. அவருக்கு அவரோட அம்மெ மூஞ்சி எப்பிடி இருக்கும்னே தெரியாது. அவ எப்பிடி இருப்பான்னு நெனச்சுப் பாப்பாரு. அதையே நெனச்சி துக்கப் படுவாரு. அம்மா அம்மான்னு ஏங்குவாரு. கண்ணீரு வடிப்பாரு. இப்பிடி இருக்கையில –

அந்த நாட்டுல ஒரு பொண்ணு பிள்ளெ உண்டாயி இருந்தா.

அவ பிள்ளெ உண்டான நேரமோ என்னமோ அவளோட புருசன் பாம்பு கடிச்சி செத்துப் போயிட்டாம்.

அவளுக்கு நெறை மாசம் முடிஞ்சி பிள்ளையப் பெத்தா. பெத்த பிள்ளையாவது உசுரோட இருக்கப்பிடாதா; அதுவுஞ் செத்துப் போச்சி.

பாவம், அவளுக்கு யாருமே கெதியில்லெ. என்ன செய்றதுன்னுட்டுந் தெரியில. மாருல பாலு கட்டிக்கிட்டு வலிக்கி. அப்பதாம் அவ அந்த ராஜாவத் தேடிப் போறா. அங்கெ அரண்மனையில ராஜா அம்மா அம்மான்னு கெடக்காரு. ஒரு சேவகம் வந்து சொன்னாம், ஒரு அம்மா வந்திருக்காங்கன்னுட்டு.

வரச் சொல்லுன்னார்.

வந்தா.

சேடிமார்க அவள அளச்சிட்டுப் போயி பன்னீரல அவ ஒடம்பக் களுவி, அத்தரு சந்தனமெல்லாம் பூசி, பசியமத்திக் கொண்டாந்து நிப்பாட்டுனாங்க. அவ ஆடெ துணிமணி எல்லாங் களைஞ்சி வச்சிட்டு, ராஜாவுக்குப் பால் குடுக்க தயாரா இருந்தா.

ராஜா வந்தாரு. அம்மான்னு சேத்துப்பிடிச்சி கட்டி அவளோட மார்ல ஆவலா பால் குடிச்சார்.

அவருக்கு உள்ளெ பால் எறங்க எறங்க அந்த அம்மாவுக்கு மார்வலி குறைஞ்சிது. ஆனா அந்த ராஜாவுக்கு அந்த அமிர்தப் பாலு இறங்க இறங்க வயிறும் மனசும் மட்டும் நெறையல. வேற என்னல்லாமோ நெறைஞ்சி. அவருக்கு உள்ளாற ஒரு ஞானம் பெறந்துச்சி. அம்மான்னு அவகால கட்டிப்பிடிச்சிக்கிட்டு கதறுனாரு.

அந்த ஒரு தரந்தாம் அவரு பால் குடிச்சதெ. அவ்வளவுதாம். அவள அந்த நாட்டுக்கு ராணியா ஆக்கி வச்சிட்டு, காட்டுக்கு

அவரு பொயிட்டாரு சாமியாரா. ராஜாவோட காரியம் யாருக்கும் விளங்கல. அதனால அவருக்கு கிறுக்கு ராஜான்னு பேரு வந்திட்டு.

## 13

நாட்டுப்புறக் கதை சொல்லிகள் நமக்கு கதைகள் சொல்லுவதோடு நிற்பதில்லை. கதை ஒன்றைச் சொல்லி இதை அழி என்பார்கள். இப்ப, மயான கதைகளை அழிப்பாங் கதைகள் என்கிறார்கள். இந்தக் கதைகள் பூர்வீகத்திலிருந்தே இருந்து வருக்கின்றன. விக்கிர மாதித்ய மன்னனுக்கு வேதாளம் எத்தனையோ விதமான அழிப்பாங் கதைகளைப் போட்டு நம்மைத் திணற வைக்கிறது; விக்கிரமாதித்ய மன்னன் அதை "அழித்த" பிறகு நமக்கு 'அப்பாடி' என்று இருக்கும்!

உறவு முறைகள் என்பவை திருமணம், குடும்பம் என்று ஏற்பட்ட பிறகுதான் வந்தது. திருமணத்திற்கு முன்னால் மனிதனுக்குப் பாலியல் சிக்கல் என்பது இல்லை. அதனால் உறவுமுறை சொல்லி அழைப்பதோ குறிப்பிடுவதோ என்பது கிடையாது.

"தாய்ப்பிள்ளைகள்" என்கிற பிரயோகம் தான் ஒரே பூர்வீக உறவுமுறைச் சொல்.

முதலில் "தாயும் அவளுடைய பிள்ளைகள்" என்று தான் இருந்தது. வேறு உறவு முறை கிடையாது. அந்தப் பூர்வீகச் சொல்தான் இப்போதும் இருக்கிறது பேச்சில்.

"நாங்கள்ளாம் தாய்ப்பிள்ளக". ஆனால், இப்போது சொல் இருக்கிறது; அதன் பொருள், நாங்களெல்லாம் உறவு முறைக்காரர்கள், சொந்தக்காரர்கள் என்று ஆகிவிட்டது. திருமணம் என்று வந்த பிறகுதான் தாயிக்கும் பிள்ளைக்கும் இடையில் "தகப்பன்" என்று வருகிறான்! இதன் பிறகுதான் குடும்பம் என்று ஏற்படுகிறது; சொந்தம் பந்தம் உறவு இப்பிடியெல்லாம் ஏற்பட்டுவிட்டது. திருமணம் ஏற்பட்டுவிட்டபிறகு ஒருத்தரை ஒருத்தர் சொந்தக் காரர்களுக்குள், உறவு சொல்லி அழைப்பதில் சிக்கல் இல்லை என்று நினைத்துக் கொண்டிருந்த காலத்தில்–

ஒருவர் இப்பிடி ஒரு கதையைச் சொல்லி, இவர்களின் உறவுமுறையைச் சொல்லு என்று நம்மிடம் கேட்கிறார்

இப்போது கதை.

ஒரு மணல் வெளி. மழை பெய்து வெரித்திருப்பதால் நடந்து செல்லும் பாதங்க்ளின் காலடித் தடம் தெளிவாகப் பதிகிறது. ஒரு அப்பனும் மகனும் அதில் நடந்து செல்கிறார்கள். அப்பனுக்கு நாற்பது வயசு இருக்கலாம். மகனுக்கு இருபது வயசு இருக்கலாம். அப்பன் தாரம் இழந்தவன். மகனுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை. இருவரும் இப்பொ கலியாணத்துக்கு பொண் தேடித்தான் போகிறார்கள்.

அப்படிப் போய்க் கொண்டே இருந்த போது, அவர்களுக்கு முன்னால் இரண்டு விதமான காலடித்தடங்கள் பதிந்து சென்றிருப்பது தெரிந்தது. பார்த்ததுமே அவை இரு பெண்களின் காலடித் தடங்கள்தான் என்று தெரிந்து கொண்டார்கள்.

ஒரு காலடி பெரிசாகவும் மற்றது சிறிசாகவும் இருந்ததினால் பெரியது அ.ம்மாவின் காலடியாகவும் சிறியது மகளுடைய காலடியாகவும் இருக்கலாம் என்றும் யூகித்தார்கள்.

மகன் சொன்னான்; சின்னக் காலடி உள்ள பெண்ணை, நான் கட்டிக்கிடுதேம் என்றான்.

தகப்பன் சொன்னான். பெரிய காலடி உள்ள பெண்ணை நாங் கட்டிக்கிடுதேம் என்று சொன்னான்.

இந்தத் தீர்மானத்தில் மாற்றம் கிடையாது என்று உறுதிப்படுத்திக் கொண்டார்கள்.

வேகமாக நடந்து, அந்த காலடித் தடத்துக்கு உடையவர்களைப் போய்ப் பார்த்தால், பெரிய காலடிக்குச் சொந்தக் காரி மகளாகவும் சிறிய காலடிக்குச் சொந்தக் காரி அம்மாவாகவும் இருந்தது!

என்ன செய்ய. பேச்சு மாறப்படாதெ.

அவர்களிடம் போய் அவர்களைப் பற்றி விசாரித்ததில்.

மகளுக்கு மாப்பிள்ளை தேடித்தான், போய்க் கொண்டிருப்பதாகவும், அம்மாக்காரிக்கும் புருசன் கிடையாது காலமாகி பல வருடங்கள் ஆகிவிட்டது என்றும் தெரிந்து கொண்டார்கள். மகளுக்குப் பதினாறு வயசும் அம்மாவுக்கு முப்பத்தாறு வயசும் ஆகிறது என்று சொன்னார்கள்.

அந்த நாலு பேருக்கும் ஒருத்தரையொருத்தர் பிடித்துவிட்டதால் இன்னும் எதுக்கு வம்பாய் மாப்பிள்ளை தேடிக் கொண்டும் பொண்ணைத் தேடிக் கொண்டும் அலையணும் என்று சொல்லி, முன்பு பேசி முடிவு செய்தபடியே தங்கள் தீர்மானத்தைச் சொல்லி அப்பனை மகளும், மகனை

அம்மையும் கட்டிக் கொண்டார்கள்!

கொஞ்ச நாள் கழிச்சி ரெண்டு பேருக்குமே பிள்ளைகள் பிறந்தது. இந்தப் பிள்ளைகள், மற்ற பிள்ளையை ஒருவருக் கொருவர் என்ன உறவு சொல்லி அழைப்பார்கள்?

கதை சொல்லியின் கேள்வி இதுதான்.

தெரிந்தவர் பதில் சொல்லுங்கள்.

## 14

போன வாரம் சொன்னது கெணக்கவே, அதே போல ஒரு கதெ. இந்தப் பொண் தன்னைத் "திங்க" வந்தவங்களை எப்படிச்சமாளிச்சி எரிச்சா என்று பாருங்க.

ஒரு ஊருல ஒரு கொசத்தியிருந்தா. அழகுன்னா அப்பிடி ஒரு அழகு.

ஒரு நா பானை சட்டிக செய்ய மண் எடுக்கப் போனா. மண் அள்ளிக்கிட்டிருந்தப்ப, அந்த நாட்டு ஊராளுத ர்ர்சா அந்தப் பக்கம் வந்தாரு. அவளப் பாத்ததும் அவருக்கு அவ பேர்ல ஆசெ வந்துட்டது.

அவகிட்டப் போயி தன்னோட ஆசைக்கு இணங்கச் சொன்னாரு. அவ யோசிச்சா. சரீன்னுட்டு, மகாராசா இங்கன இந்த மண் கிடங்குக்குள்ள. இருக்க வைக்க வசதிப்படாது. ராத்திரி நடுச்சாமத்துக்கு எம் வீட்டுக்கு வந்துருங்க. எம் புருசன் வெளியூருக்குப் போனவன் காலையில தான் வருவாம். வீட்டுலன்னா வசதிபோலயெல்லாம் இருக்கலாம்ன்னா. ராசாவும் சரீன்னு போயிட்டாரு.

செத்தோடங் கழிச்சி மந்திரி அந்தப் பக்கம் வந்தாரு. கொசத்தி மண்ணு அள்ளிக்கிட்டிருந்தா. பாத்ததும் அவருக்கு ஆசைய அடக்க முடியல. கிட்ட நெருங்கிப் போயி அவள தன்னோட ஆசைக்கு இணங்கச் சொன்னாரு.

கொசத்தி பாத்தா. அடடா, இவரு ஊராளுத ராசாவுக்கு மந்திரி. இவர எப்பிடி சமாளிக்கன்னு நெனச்சி, மந்திரியாரே, இங்கனக்குள்ள இந்த மண்ணு குழிக்குள்ள இதுக்கெல்லாம் வசதிப்படாது. நீங்க நம்ம வீட்டுக்கு வந்துருங்க. அங்கன தாம் நல்லா இருக்கக்கொள்ள வசதியா இருக்கும்ன்னா.

அப்டியா...சரி எப்ப வரன்னு கேட்டாரு. ரெண்டாஞ் சாமத்துக்கு சரிய்ய வந்துருங்கன்னா. சரீன்னு பொயிட்டாரு.

செத்தோடங் கழிச்சி, தளபதி அந்தப் பக்கமா வந்தாரு.

கொசத்தியப் பாத்ததும் கிட்ட வந்து சரசமாடத் தொடங்கினாரு. கொசத்தி பாத்தா. இதேதடா சங்கட்டம்; இவன எப்பிடி சமாளிக்கன்னுட்டு, தளபதியாரே இங்கனக்குள்ளெ இந்த மண் எடுத்த குழிக்குள்ளார இதுக்கெல்லாம் வசதிப்படாது. ராத்திரி நம்ம வீட்டுக்கே வந்துருங்க. அங்க வச்சிக்கிடலாம் எல்லாத்தையும்ன்னா. ராத்திரி எந்நேரத்துக்கு வரன்னு கேட்டாரு தளபதி.

சரிய்யா மூணாஞ்சாமத்துக்கு வந்துருங்கன்னா. சரீன்னு பொயிட்டாம். செத்தோடங் கழிச்சி சேவுகம் (சேவகன்) வந்தாம். அவனுக்கு அவளப் பாத்ததும் கிறுக்குப் பிடிச்சது கெணக்க ஆயிட்டது. பாட்டுப் பாடிக்கிட்டே கிட்ட நெருங்குனாம்.

எப்பா, இதுக்கு இங்கே எடம் சரியில்லெ. நம்ம வீட்டுக்கு வந்துரு. அங்கன வந்தா ஆடிப்பாடி சந்தேஷமா இருக்கலாம்ன்னா.

எப்பவர எந்நேரம் வர — அத
இப்பவே சொல்லு
சொல்லு சொல்லுன்னு பாட்டுலயே கேட்டாம்.
அதுக்கு அவ,
நாலாஞ் சாமம் நல்ல நேரம் _நல்லா
நாக்க தொங்க விட்டுகினு வா.
நாக்குக்கு வேல ரொம்ப இருக்குன்னா!

வீட்டுக்கு வந்து, கொசத்தி நடந்த கதெய புருசங்கிட்ட சொன்னா. ரெண்டு பேரும் கூடிப் பேசி ஒரு முடிவுக்கு வந்தாங்க.

ராத்திரி ஆச்சி. நடுச் சாமம் இருக்கும்; ராசா வந்தாரு. வாங்க மகராசா வாங்க மகராசான்னு கதவத் தொறந்தா.

இந்நேரம் என்ன பண்ணிக்கிட்டிருக்கென்னு ராசா கேட்டாரு.

சோறு சமைச்சிக்கிட்டிடு இருக்கேம்ன்னா

இந்நேரம் வரைக்கும் என்ன செஞ்ச?

கொண்டு வந்த மண்ணெ ஊறவச்சி, மிதிச்சி பக்கு படுத்தினேம்.

வழக்கமா இந்நேரந்தான் சோறுசமைப்பியா.

ஆமா ராசாக்களெ; எங்க பாடு இப்பிடித்தாம். என்ன செய்ய. இப்பிடி ராசா அந்தக் கொசத்தியோட

பேசிக்கிட்டிருந்தப்ப, கதவுமெல்ல தட்டுற சத்தங் கேக்கு.

யாரூன்னு கேட்டா.

நாந்தாம் மந்திரி வந்திருக்கேம்னு பதிலு வந்தது.

கொஞ்சம் நில்லுங்கன்னுட்டு, ராசா கிட்ட வந்து அவ, என்ன செய்ய இப்பொன்னு கேட்டா.

என்னைய ஒரு இடத்துல ஒளிச்சி வையின்னாரு.

சரீன்னு அவர வீட்டுக்குப் பொறத்தால இருக்க கொட்டாயில கொண்டு போயி அவரெ தவழ்ற பிள்ளெ போல இருக்கச் சொல்லி மேலு பூராவும் மண்ணெ அப்பி ஒரு யானை உருவா செஞ்சி வைச்சிட்டு வந்து கதவத் தொறந்தா.

என்ன பண்ணிக்கிட்டிருந்தென்னு கேட்டாரு மந்திரி.

சோறு சமைச்சிக்கிட்டிருதேம்ன்னா.

..........

..........

இப்பிடியே மந்திரிகிட்டெ பளக்கம் விட்டுக்கிட்டு சமையலையும் கவனிச்சிக் கிட்டிருக்கிறப்ப, மெல்லக் கதவு தட்டற சத்தம் கேக்கு.

யாரு இந்நேரத்துலன்னு கேட்டா.

நாந்தாம் தளபதி வந்திருக்கேம்; கதவத் தொறன்னு அதாரட்டியா சொல்லுதாரு தளபதி.

என்ன செய்ய இப்பன்னு மந்திரிகிட்ட ஆலோசனை கேட்டா. அவம் வந்துட்டுப் போற வரைக்கும் என்னெ செத்தோடம் ஓரிடத்துல ஒளிச்சி வையின்னாரு.

வீட்டுக்குப் பெறத்தால, அந்த யானை உருவுக்குப் பக்கத்துல கொண்டு போயி மண்டி போட்டு தவழ்ற மாதிரி இருக்க வச்சி மேலெல்லாம் களிமண்ண அப்பி ஒரு குதிரெ உருவா செஞ்சி வச்சிட்டு வந்து கதவத் தொறந்தா.

தளபதி வந்தாரு. இன்னேர வரைக்கும் என்ன செஞ்சிக்கிடிருந்தேன்னு கேட்டாரு. சமையல் செய்த வயணத்த வர்ணிச்சா. தளபதி அவசரப்படுத்துனாரு. செத்தப் பொறுங்க; நீங்களும் சாப்புடலாம்; நானும் ஒருவாயி சாப்புட்டுகிடுதேம். காலையிலிருந்து ஒண்ணும் நா சாப்புடலன்னா.

சரி சீக்கிரம் சமையல் முடின்னு சொன்னாரு தளபதி. இதுக்குள்ள நாலாஞ்சாமமாயிட்டது.

சேவுகம் புள்ள வாராரு, பாட்டுப் படிச்சிக்கிட்டு.

யாரு அது; ஓம் புருஷனானு கேக்காரு தளபதி. புருசனில்ல. ராசாவோட சேவுகருன்னா அவனும் வந்து கதவை தட்டுனாம்.

கதவத் தொறக்கட்டுமான்னு கேட்டா.

வேண்டாம் வேண்டாம் தொறந்துறாதே. இப்பொ அவம் என்னெ இங்கெ பாத்தா ராசாக்கிட்டெப் போயி ஒண்ணுக்கு நாலாப் பத்த வச்சிருவாம். ராசா ஒரு கொணங்கெட்டவரு. என்ன இப்பொ ஒரு இடத்துல கொண்டு போயி ஒளிச்சி வச்சிரு. அவம் போன பிறகு வந்து என்னக் கூப்பிடுன்னாரு.

விறுவிறுன்னு தளபதியக் கொண்டு போயி யான, குதிரெ, பக்கத்துல மண்டி போடச் சொல்லி, தவழ்றாப்ல இருக்கவச்சி மேலெல்லாம் களிமண்ணெ அப்பி, நெம தட்டுறதுக்குள்ள ஒரு புலி உருவா செஞ்சி முடிச்சி வைச்சிட்டுவந்து கதவத் தொறந்தா.

சேவுகம் புள்ளெ வந்தாம். அவங்கூட பேசிக்கிட்டிருந்தப்ப அவ புருசன் வந்து கதவத்தட்டுனாம், பலமா.

அய்யோ, ஏம் புருசன் வந்துட்டானே என்ன செய்யன்னு கேட்டா. எங்காவது ஒளிச்சு வய்யி சீக்கரம்ன்னாம்.

அவனெக் கொண்டு போயி கரடி உருவா செஞ்சி வச்சிட்டா.

புருஷன்காரன் வந்து, பொம்மை கேட்டவங்க சாயிந்தரமே வந்திருவாங்க. வைக்கோலை எடுத்து மேலே போடு; சூளை போடுவோம்னு சொன்னதும் வைக்கோல மேல போட்டு மண்ணெப் பூசி தீயெ வச்சிட்டா கொச்சத்தீ. இதுக்குப் பெறகுதாம் அந்தப் பழமொழியே வந்ததுன்னாரு கதெ சொன்னவரு.

என்ன பழமொழின்னு கேட்டாங்க கதெ கேக்கிறவங்க.

கொழுத்துப் போயி கொசத்திகிட்டப் போனா - அவ

இழுத்துவச்சி சூளையில வச்சிருவா.

## 15

சுரண்டல் என்கிற விடயம் பொருளாதாரத்தில் இருப்பதுபோல பாலியலிலும் உண்டு.

நாட்டுப் புறத்தில் இருந்த, இருக்கிற பெருந்தனக்காரர்கள் மிட்டா, மிராசு, நாட்டாண்மை, ஜமீன் வகையறா இந்தச்

“சுரண்டல்களை எப்படி நடத்தி வந்தார்கள் , அந்தச் சமூகச் சீரழிவை பாதிக்கப்பட்ட பெண்டுகள் எப்படிச் சமாளித்தார்கள் என்பதையெல்லாம் கதை கதையாகச் சொல்லுகின்றன நாட்டுப்புறக் கதைகள். அதில் ஒன்றிரண்டை இப்போது பார்க்கலாம்.

ஒரு ஊர்லெ ஒரு ஏகாலிப் பொண்ணு இருந்தா; புதுசா கலியாணமாகி வந்தவ. அவளுக்குத் தனங்கள் ரெண்டும் கும்பம் போல் இருந்தது; பாக்கிறவங்க ஆசைப்படும்படியா.

அந்த ஊரு நாட்டாம ஒரு கவுச்சுமாறி (படு பெண்பித்தன்). இவள எப்படியாவது “வளைச்சி”றணும்ன்னு தீர்மானம் பண்ணீட்டாம். ஏகாலி வீட்டுல இல்லாத நேரமாப் பாத்து, ஏதாவது ஒரு சாக்கு சொல்லிக்கிட்டு வந்து நாட்டாம அவகிட்ட சாடமாடையா எசகுபெசகா பேச்சுக் கொடுப்பாரு. வந்திருக்கதோ நாட்டாம. அவரெ ஒண்ணுஞ் சொல்ல முடியாது. ‘அதிகாரி வந்து கையப் பிடிச்சா விதி வசம்’ன்னு சொல்வம். என்ன செய்ய. அதுக்காச்சுட்டி அவம் ஆசைக்கு இணங்கிற முடியுமா. என்ன செய்றதுன்னுட்டுந் தெரியாம, புருசங்காரங்கிட்டயுஞ் சொல்ல முடியாம கொஞ்சநா தவிதாயப் பட்டா. வர வர நாட்டாமயோட போக்கும் நடந்துக்கிறதும் அவளால சகிச்சிக்கிட ஏலலெ. நேர துறைக்குப் போயி புருசங்கிட்ட நடப்பச் சொல்லி வருத்தப்பட்டா.

நட்டாமய நேரடியாப் பகைக்க முடியாது. அதே சமயத்துல அவனுக்கு புத்தியும் வரவழைக்கணும்ன்னு நெனச்சி ஏ புள்ளெ இதுக்குப் போயி நீ ரொம்ப சடச்சிகிடாதெ. நா சொல்றபடி செய்யி. நாளைக்கு அவம் வந்தமின்னா, ராத்திரிக்கு ரெண்டாஞ் சாமத்துல வாங்க; நா முழிச்சிக்கிட்டுதா இருப்பேம். கதவ ஒருச்சாச்சி சாத்தி வச்சிருப்பேம். தள்ளி திறந்துக்கிட்டு உள்ளெ வந்துருங்கெ. ஏம் புருஷன் ஊர்ல இல்லென்னு சொல்லீரு. மத்ததெ நாங் கவனிச்சிக்கிருதேம்ன்னான்.

அடுத்தநா பகல்ல நாட்டாம வந்தாம். புருசஞ் சொல்லிக் கொடுத்தமாதிரியே சொன்னா. நாட்டாமெ நம்பீட்டாம். பெய பொண்டாட்டி நம்ம வலையில விழுந்துட்டா. வேட்டதாம்னு மகுந்து போயிட்டாம். எப்ப ரெண்டாஞ் சாமமாகும்ன்னு தவமிருந்தாம். ரெண்டாஞ் சாமக் கோழி கூப்ட்டதோல்லையோ விடுவிடுன்னு போனாம். கதவு காவாசி தெறந்து இருந்தது. மொள்ள... கதவு எங்க ‘பாட்டு’ பாடிடுமோன்னு எச்சரிக்கையாத் தொறந்தாம். விளக்கு சுருக்கி வச்சிருந்தது. அந்த எளம் வெளிச்சத்துல அவ படுத்திருக்கது இவனுக்கு நல்லாவேத்

தெரியுது.

யாரு; நாட்டாமயா, வாங்க; கதவ சாத்தீட்டு வாங்கன்னா. சாத்தீட்டு கிட்டக்க வந்தாரு. மொதல்ல இப்பிடி இந்த பொட்டணத்துமேல உக்காருங்கன்னு அழுக்குப் பொட்டணத்தெக் காமிச்சா. உக்காந்தாரு. சுத்திமுத்திப் பாத்தாரு.

எம்புட்டு நேரந்தாம் அந்த அழுக்குப் பொட்டணத்துல உக்காந்திருக்கது. மொள்ள நவண்டு அவகிட்ட வந்தாரு.

அவ சொன்னா–

எங்க குல வழக்கப்படி முத அழுக்குப் பொட்டணத்துல சத்தோடம் உக்காந்திருந்துட்டு, அதும்பொறகு நூறு உக்கி (தோப்புக்கரணம்) போட்ட பெறகுதாம் ஆம்பள வந்து பொம்பள பக்கத்துல படுக்கணும்னா.

காம மயக்கத்துல இருக்கவம் பொட்டைச்சி சொல்றதெக் கேக்காம இருப்பானா.

நூறென்னடி ஒன்னோட "இது"க்கு நூத்தம்பது வேண்ணாலும் போடுதேம்னு போட ஆரம்பிச்சாம்.

அவளுக்கும் அவ புருசனுக்கும் அழுக்கு உருப்படிக எண்ணிப் பழக்கம் இருந்ததுனால, நாட்டாம போடுற உக்கிய எண்ண ஆரம்பிச்சாங்க. (புருஷன் பரண் மேலே படுத்துக்கிட்டே மனசுக்குள்ள ஒண்ணு ரெண்டுன்னு எண்ணுதான்!)

உக்கி போட்டுப் பழக்கமில்லாதவர்களுக்கு இத்தன உக்கி போடுததுங்கறது அவ்வளவு லேசில்லெ. முப்பது உக்கி போடுதது வரைக்கும் நாட்டாம வேகமாப் போட்டுட்டாம். நாப்பது போடும் போது மெதுவா போட்டாம். அம்பது போடும்போது மெள்ளப் போட்டாம். அறுபது அதவிட மெள்ள. எழுபதுல திணறுனாம். கொஞ்சம் இருந்து போடலாமாண்ணு யோசன வந்தது. இவளுக்கு எதுக்க நாம அப்பிடிக் காமிச்சிக்கிடப் பிடாதுண்ணுட்டு எம்பது போட்டு முடிச்சாம். தொண்ணூறுல தெணற ஆரம்பிச்சிட்டாம்! என்ன ஆனாலும் சரிதாம்னுட்டு தொண்ணுத்தி ஒன்பதாவது உக்கி போட்டு முடிஞ்சதும் பரண்மேல படுத்திருந்தவம் போதும் நாட்டாம நிறுத்திக்கிடும்னு சத்தம் போட்டுச் சொன்னாம்!

நாட்டாம்ம தெகைகச்சதப் பாத்து அவ களுக்குன்னு சிரிச்சிட்டா. அவங்க போட்ட நாடகம் புரிஞ்சி போச்சி நாட்டாமைக்கு! வந்தகாலும் வராத காலையும் இழுத்துக்கிட்டு நாட்டாம பிடிச்சாரு ஓட்டம்!!

அடுத்த நா,

ஏகாலியோட மச்சினன் கழுத நாட்டாமையோட பக்கத்துத் தோட்டத்துல மேஞ்சிட்டது.

விவகாரம் ஊர் பஞ்சாயத்துக்கு வந்தது.

கழுதைக்காரன் வந்தாம். தோட்டக்காரன் வந்தாம். ஏகாலியும் பக்கத்துல நிக்காம்.

நாட்டாம ரட்ணக்கால் போட்டு உக்கா ந்துக்கிட்டு விவகாரத்த விசாரிக்காரு.

தோட்டக்காரன் வழக்கச் சொன்னாம்.

மேஞ்ச பயிருக்கு நட்ட ஈடு வேணும்ன்னுட்டு கேட்டாம். என்னப்பா சொல்லுதேன்னு நாட்டாமெ கழுத காரன்கிட்ட கேட்டதும், வாயில்லாத சீவன் இது எசமான். எப்பிடியோ தவறி விழுந்திட்டது. வேணும்ன்னு நா மேய்க்கல. இந்த ஒரு பிழைக்கு மன்னிச்சிருங்க. இனிமேப்பட்டு இப்பிடி நடக்காமப் பாத்துக்கிடுதேம்னாம். பக்கத்துல இருந்த ஏகாலி, தன்னோட மச்சினனெப்பாத்து நாட்டாமைக்குக் கேக்குராப்பல,

ஏம் மாப்ளெ கவலைப்படுதெ. நம்ம நாட்டமக்கார அய்யா ஒன்னெ ஒண்ணுஞ் செஞ்சிற மாட்டாக. வேணும்ன்னா உன்ன ஒரு நூறு உக்கி போடுலேம் பாக. அவுகளுக்குத் தெரியாத உக்கியா அவுக போடாத உக்கியா ன்னாம்!

ஏ பயபுள்ளெ; குடியக் கெடுத்தானெ ன்னு நாட்டாம பதறிப் போனாரு. சரி, இத இப்பிடிக் கொண்டு போகப்படாதுன்னு நெனச்சி,

பாவம் ஏகாலிப் பயபுள்ள. அவம் வேணும்ன்னு செய்யல. வாயில்லாத சீவன்; பசிக்கு ரெண்டு பயிரக் கடிச்சிட்டுன்னு சொல்லி–

ஏடே, பயபுள்ளெ; நம்ம ஊரு பிள்ளையார் கோயிலுக்கு ஒரு தேங்கா வாங்கியாந்து விடலைவிட்டுட்டுப் பொ. இனிமேப் பட்டாவது இப்பிடி நடத்துக்கிறாமப் பாத்துக்கன்னு தீர்ப்பு சொல்லீட்டு–

துண்டெ உதறி தோள்ளெ போட்டுக்கிட்டு, வந்த காலயும் வராத காலையும் இழுத்துக்கிட்டு வீடு போயிச்சேந்தாரு.

தோட்டக்காரனுக்கும் கழுதக்காரனுக்கு மட்டுமில்ல. ஊர்க்காரங்களுக்கும் ரொம்ப ஆச்சரியம்; நாட்டாம இப்பிடியாப் பட்ட விவகாரத்துல கார்சாரமாப் பேசி, வசமா அபராதம்

போட்டுத் தீட்டிருவாரெ; என்ன, ஆயிப்போச்சி அவருக்குன்னுட்டு ஆச்சரியமான ஆச்சரியம்!

## 16

தாத்தாவுடன் ஒருநாள் ஒரு பெரியவர் வந்து பேசிக் கொண்டிருந்தார். அப்போது, சிவனிடமே வரம் வாங்கி அதை பரிசோதிக்க சிவன் தலையிலேயே கையை வைத்துச் சிவனைச் சாம்பலாக்க முயன்ற பஸ்மாசுரன் கதையைத் தாத்தாவிடம் சொன்னார்.

தாத்தாவும் அந்தக் கதையைக் கேட்டார்; நாங்களும் கேட்டோம். புராணக் கதைகளில், அது தெரிந்த கதையாக இருந்தாலும்கூட மீண்டும் கேட்கலாம். எத்தனை தடவை கேட்டாலும் சலிக்காதுதான்.

கதை சொன்ன பெரியவர் போன பிறகு, நாங்கள் தாத்தாவை கதை சொல்லும்படி கேட்டுக்கொண்டோம்.

புராணக் கதை வேணுமா நாட்டுப் புறக்கதை வேணுமா என்று கேட்டார். புராணக் கதையை எப்பவும் கேட்கலாம். இந்த மாதிரியான நாட்டுப்புறக் கதைகளில் அதுவும் தெரிந்த கெட்ட வார்த்தைக் கதைகளைச் சொல்ல தாத்தாவை விட்டால் எங்களுக்கு வேற யார் இருக்கிறார்கள். அவருடைய ஆயுள் முடிவதற்குள் அவரிடமிருக்கும் அனைத்துக் கெட்ட வார்த்தைக் கதைகளையும் கறந்துவிட வேணும் என்று ஆசை எங்களுக்கு. அவர் சொன்ன கதைகளுக்கு முடிவே இருப்பதாகத் தெரிய வில்லை. அனுமார் வால் போல அவை முடிவில்லாமல் போய்க் கொண்டே இருந்தன. இதில் ஒரு சங்கட்டம் என்னவென்றால் அவருக்கு கதை சொல்லும் உணர்வு வரவேண்டும். வந்து விட்டாலும் என்ன கதை சொல்ல என்று திகைப்பார்! சரி; இவரிட்ட கதை இவ்வளவுதான்; இருப்பு தீர்ந்துவிட்டது என்று தீர்மானிப்பதற்குள், இப்படித்தான் பாரு... ஒரு ஊருல என்று தொடங்கி விடுவார்! சில விஷயங்கள் அவருக்கு சில கதைகளை ஞாபகத்துக்குக் கொண்டுவந்துவிடும்.

அன்றைக்கு பஸ்மாசுரன் கதை அவருக்கு ஒரு வேசியின் கதையை ஞாபகத்துக்குக் கொண்டுவந்துவிட்டது.

சொல்ல ஆரம்பித்தார்.

ஒரு வேசி இருந்தா. ரொம்ப பிரமாதமா இருப்பா. மகா சிவபக்தை. அவ ஒரு நா சிவனைக் குறிச்சி தபசிருந்தா. அவளுக்கு என்ன குறை, எதுக்காக தபசிருக்கான்னு சிவனுக்குத் தெரியல. ஆனாலும் பாப்பம்னுட்டு தபச சோதிச்சிப் பாத்தாரு. இவ அதுல திடமா இருந்தா. பிறகென்ன காட்சி கொடுத்துற வேண்டியதுதானென்னு வந்து காட்சி கொடுத்து, என்ன வரம் வேணும்ன்னு கேட்டாரு. பணக்காரங்கிட்ட சாமி வந்து என்ன வரம் வேணும்னு கேட்டா அவம் என்ன கேப்பாம்; நா இன்னும் பெரிய பணக்காரன் ஆகணும்ன்னுதானே கேப்பாம். அந்த மந்திரிதாம் இவளுங்கேட்டா. சாமீ, எனக்கு இன்னும் நெறைய்ய காம ஆசையைக் கொடு. ஏந் தொழிலு இன்னும் நல்லா நடக்கணும்ன்னு கேட்டா!

அட பாதகத்தி; அப்பிடியா சமாச்சாரம். சரி பொ; அதுபடியே ஆகட்டும்ன்னு சொல்லி பட்டுன்னு மறைஞ்சிட்டாரு! ஏம் அப்பிடி பட்டுன்னு மறைஞ்சாருன்னு கேட்டான் கிட்டான். எல்லாங் காரியத்தோடதாம்ன்னு சொல்லி சிரிச்சி, பஸ்மாசுரன் ஞாவகம் வந்திருக்கும்ன்னுட்டும் மேக்கொண்டு சொல்ல ஆரம்பிச்சாரு.

அந்த வேசிக்கு காம வெறியே பிடிச்சிட்டது. அது எத்தன மனுசங்க வந்தாலும் தீரலெ. எவ்வளவு பேரு வந்தாலும் கொண்டா கொண்டா அப்பிடீங்கா. ஆக மனுசங்களால அவளுக்கு ஜவாப்பு சொல்ல ஏலலெ. யாரு என் ஆசை வந்து தீத்து வைக்காகளோ அவுகளுக்கு ஆயிரம் பொன் தருவேம்ன்னு அறிவிச்சா. கெட்டவார்த்தையில் தேர்ச்சியடைஞ்ச மன்னாதி மன்னங்கள்ளாம் வந்து பாத்தாம்; அசைக்க முடியல அவளெ. பெரிய பெரிய பயில்வாங்கள்ளாம் வந்தாம்; போங்கடா பிசிக்கிப் பயகளான்னுட்டா. அவ வெறிய யாராலயும் நிறைவு படுத்த முடியல. கடோசியில மனுசங்கள்ளாம் அவளப்பாத்ததும் ஓட ஆரம்பிச்சுட்டாங்க.

இனி இந்த மனுசப் பயல நம்பிப் பிரயோசனமில்லேனுட்டு மிருகங்கள்ட்டெப் போனா. கழுத சரியில்லேன்னு குதிரையிட்டப் போனா. குதிரை சரியில்லேன்னுட்டு யானையிட்டப் போயிப்பாத்தா. அதும் திருப்தியா இல்லெ. காட்டு வழியா ஓடுனா. அவ வார வரத்தப் பாத்து மிருகங்க எல்லாம் பயந்து ஓட்டம் பிடிச்சது. வெறியான வெறியில்ல அவளுக்கும். அப்பிடி ஒரு காமவெறி.

கடோசியில ஓரிடத்துல வந்து நிண்ணா. அந்த இடத்துல

ஒரு பெரிய்ய சிவலிங்கம்; ரொம்பத் தடியாகவும் ரொம்ப ஒசரமாவும் இருந்தது. அதைப் பார்த்ததும் அவளுக்கு இதாம் நமக்குச் சரியா இருக்கும்ன்னு நெனைச்சி, சேலைய வழிச்சிக்கிட்டு மேலே உக்காந்துட்ட.

அப்பா; இது கொஞ்சம் பரவாயில்லென்னு பட்டது. சிவன் பாத்தாரு. அட பாதகத்தி; ஒன்னவிட அந்த பஸ்மாசுரனே தேவல போலிருக்கென்னு நெனைச்சி, இனி நீ இந்த மண்ணுல இருக்கப்படாது. கடலுக்குப் போ. அங்க ஒரு ஆண் "திமிங்கலம்" பொண் திமிங்கலம் கிடைக்காம வெறிபிடிச்சி அலையுது... நீ இப்பவே பெண் திமிங்கலமாகப் போகக் கடவதுன்னு சொன்னதும் அதேபடி ஆயிட்டா.

என்னது திமிங்கலமா என்று கேட்டான் கிட்டான்.

ஒரு திமிங்கலம் நாலு யானைகள ஒரே வேளையில பிடிச்சித் தின்னுரும். இதுக்கு "யானெ முழுங்கின்னு" பேரு. அதே போல பத்துத் திமிங்கலங்களப் புடிச்சி ஒரே முழுங்கா முழுங்கற மீனுக்கு திமிங்கல முழுங்கி அல்லது "திமிங்கல கலம்" ன்னு பேரு என்றார்.

சரி; அதுக்குப் பிறகு?

அதுக்குப் பெறகுதாம் அவளுக்கு ஆசெ அடங்குனதாம்.

அவ ஒரு சிவ பக்தையா இருந்ததுனாலதாம் சிவனாரு நெத்திக் கண்ணெத் தொறக்கல என்று சொல்லி முடித்தார் தாத்தா.

## 17

வேசி ஒருத்தி தினமும் ஒரு குளத்தில் குளிக்கப் போவா. அந்தக் குளத்துல தவளைக நிறைய்ய இருந்தது.

தவளைக நிறைய்ய இருந்ததுனால அதுகளைப் பிடிச்சித் திங்க பாம்புகளும் நிறைய்ய வந்தது. பாம்புக வந்து தவளைகளைப் பிடிச்சித் திங்க ஆரம்பிச்சதும் தவளைகளுக்கு ரொம்ப பயமாப் போச்சி. அதுகளுக்கு என்ன செய்யிறதுன்னுட்டுத் தெரியல; எங்கனப் போயி ஒளியறதுன்னுட்டுந் தெரியல. அதுகளோட நெலமை ரொம்பப் பரிதாபமா ஆயிட்டது.

இந்த வேசி தலைக்கு சீய்க்கா போட்டுத் தேச்சிக் குளிக்க,

தண்ணிகுள்ள முங்குன ஒரு படிக்கட்டுல வசமா உக்காந்துக்கிட்டு கண்ணுல 'சீய்க்க விழுந்துராம இருக்க கண்ண மூடிக்கிட்டு தலையைத் தேய்ச்சிக்கிட்டிருக்கா.

அந்த சமயத்துல ஒரு தண்ணிப் பாம்பு ஒரு தவளைய விடேன் தொடேன்னு முடுக்கிட்டு வருது. கடோசியா தவளைக்குத் தப்பிக்க ஒரு வழியுந் தெரியல.

இவ கால அகட்டி உக்காந்து தலெ குளிச்சிட்டிருந்தாளா. அது பாட்டுக்குப் போயி இருந்துக்கிட்டது. பாம்புக்குப் பார்வை தவளை மேலே. அதனால தவளையங் காங்கலங்கவும் அது திரும்பி போயிட்டது. தவளைக்கு இப்பதாம் உயிரு வந்தது. இம்புட்டுப் பாதுகாப்பா. குளிருக்கு அடக்கமா ஒரு இடம் கிடைக்கும்னு அது கனவுலயும் நெனைக்கல.

சரி; இதுலயே இப்படியே இருப்போம்ன்னு இருந்துக்கிட்டது. அந்தத் தவளையப் பிடிக்க அதெ வெரட்டிட்டு வந்த பாம்புக்கு ஒரு சந்தேகம் வந்துட்டது. அதுக்குள்ள இந்தத் தவளை எங்கிட்டுப் போயிருக்க முடியும்ன்னுட்டு.

ஒரு வேளை இதுக்குள்ள இருக்கலாமோன்னு தலைய நுழைச்சிப் பாத்தது.

உசாரா இருந்த தவளை இத எதிர்பாத்து இருந்ததால் இன்னும் உள்ளுக்குப் போயி வசமான இடத்துல பதுங்கியிருந்துக்கிட்டது. உள்ளெ நுழைஞ்சி பாத்த பாம்புக்கு ஒரே இருட்டா இருந்ததுனால ஒண்ணுந் தெரியல. அதனால தலைய வெளிய இழுத்துக்கிட்டு வேற தவளையப் பாப்பம்னு போயிட்டது.

பாம்பு போயிட்டதுன்னு உறுதியாகத் தெரிந்த பிறகு தவளை மெள்ள வெளியே வந்துட்டது.

உயிர் தப்பியதை நினைத்து அதுக்கு ஒரே புல்லரிப்பு நிறைந்த தாங்க முடியாத மகிழ்ச்சி.

இந்த மகிழ்ச்சியை தனது சேக்காளித்தவளையிடம் போய்ச் சொன்னது. நடந்ததை அப்பிடியே சொல்லி, பாம்பு உள்ளே வந்து தேடியதையும் தன்னைப் பிடிக்க முடியலைன்னு சொல்லிவிட்டு—

ஹ! அந்த இடம்; ரொம்ப அருமையான இடம் ஒளிய. நீயும் அதப் போய்ப் பாக்கணும். பாத்து வச்சிக்கிட்டா பாம்புக வெறட்டும்போது போயிப் பதுங்கிக்கலாம்ன்னு சொன்னதும் இந்தப் பயித்தியாரத் தவளை உள்ளெ போயிப் பாக்கிறதுக்கும் அவ குளிச்சி எழுந்திருக்கிறதுக்கும் சரியாக இருந்தது.

அடடா உள்ள மாட்டிக்கிட்டமே. சரி; நாளைக்கி இந்நேரந்தான் வெளியே வர முடியும்னு கம்முனு பதுங்கி இருந்துக்கிட்டது.

அதேபோல மறுநா அந்த வேசி அந்த குளத்துக்கு தலை குளிக்க வந்து தண்ணீர்ப் படியில உக்காந்து தலையெத் தேச்சிக் குளிச்சபோது தவள தப்பிச்சேன் பிழைச்சேன்னு பாஞ்சி வெளியே வந்திட்டது. சேக்காளித்தவளெ, என்னடா இவம் போனவனக் காங்கலையெ; பாம்புதாம் முழுங்கி நசசோன்னு கவலையா இருந்த சமயம்; இது அதெத்தேடி வந்தது சிரிச்சிக்கிட்டே.

என்னப்பா, என்ன ஆச்சி; எப்பிடி இருந்ததுன்னு, மற்றதவளை கேக்க–

"அய்யோ அதெ ஏங் கேக்கெபொ; ஒரு பாம்பா ரெண்டு பாம்பா எத்தனெ பாம்புங்கற. விதவிதமா வருதப்போவ்! நானும், பாத்ததுலயும் பாத்தேன்; இப்படிப் பாம்புகளைப் பாத்ததில்லப்ப, வார சனியன் எட்டிப் பாத்துட்டு, இல்லெண்ணு தெரிஞ்சதும் போக வேண்டியதுதானே. ரொம்ப சந்தேகம் பிடிச்ச பாம்புகப்பா. மாறி மாறி, மாறி மாறி வந்து வந்து பாக்குதுங்கெ. நாஅம்புடுவேனா. எவ்ளோ எடம்கிற. நம்ம குளத்துத் தவளையெல்லாமெ போயி இருந்துக்கிறலாம். அப்பேர்க்கொத்த பெரிய எடம் அது என்று பெருமை பீத்திக்கொண்டது அந்தத் தவளை அப்பிடியா சங்கதி. நா நாளைக்குப் போயி பாத்துட்டு வந்துரணும் அதெ என்று சொல்லிக் கொண்டது மற்ற தவளை.

## 18

நாட்டுப்புறக் கதைகளின் ஒரு பிரிவான பாலியல்க் கதைகளைச் சொல்லுவதற்கு ஒருவகை "ஜாலக்" தேவைப்படும். சொல்ல முடியாத. பளிச்சென்று சொல்லிக்காட்ட முடியாத பச்சை வார்த்தைகளை மாற்றுச் சொல்லாலும் குரல்தேய்ப்பாலும் அபிநயத்தாலும் ஒரு சிமிட்டலாலுங்கூடச் சொல்லிவிட முடியும்.

ஆனால் அதை எழுதுகிறது போதுள்ள இக்கெட்டு வேற எதிலுங் கிடையாது!

இந்தக் கதையை உங்களுக்கு நான் எப்படித்தான்

சொல்லப்போகிறனோ எழுத்தில்.

ஒரு வசதியான சம்சாரி. கல்யாணத்துல விருப்மில்லாததுனால காலா காலத்துல கலியாணம் முடிச்சிக்கிடாம வயசாகி, தவங்குன பிறகு ஒரு கொஞ்ச வயசுப் பெண்ணைக் கட்டிக்கிட்டாரு. ஒவ்வொருத்தருக்கும் ஒரு உடம்பு வாகு. சுரத்தில்லாத மக்கு உடம்பு அவருக்கு. அதுக்கு அவரு என்ன பண்ணுவார். பாவம். அவரோட சம்சாரம் அப்படி இல்லெ; நல்ல வேகம், சுதாரிப்பு சுறுசுறுப்பு எல்லாம்; எல்லா விசயத்துலயும். நடந்துபோனா கன்னத்துல பாம்படம் டாண்டாண் ன்னு அடிக்க நடப்பா; பூமியே அதிரும் அவ நடந்தா.

சம்சாரிக்கு சம்சாரித்தனத்துலதாம் பிடிப்பு அதிகமா இருந்தது. புதுசு புதுசா நெலம் வாங்குவாரு. புதுசா ஒரு நெலம் வாங்கீட்டா ரவ்வும் பகலும் அதுலேயே கெடந்து உழைப்பாரு. அதெ சீர்திருத்தி சரியான நெலமா ஆக்க அப்பிடி ஒரு அக்கரை. இந்த அக்கரை கவனமெல்லாம் அவரு புதுசாகக் கல்யாணம் கட்டிக் கொண்டு வந்த பெண்டாட்டியிட்ட செலுத்தணுமேங்கிற கவனம் கொஞ்சங் கூடத் தெரியல அவருக்கு.

கலியாணம் ஆகி வந்த புதுசுலே, தன்னோட புருசன் ஏன் இப்படி தேவையில்லாம வெக்கப்படுதாருன்னு அவளுக்குப் புரியல. பெறகுதாம் தெரிஞ்சது; அவருக்கு இருக்கற தாழ்வு மனசுக்கான காரணம். என்னசெய்ய அவளுக்கும் வருத்தமாத்தான் இருந்தது. எல்லா அங்கங்களையும் கடவுள் சிலருக்கு பெரிசாகவோ சிறிசாகவோ கொடுத்துர்றாரு. இவருக்கு ரொம்பச் சிறுசா அமைஞ்சி போச்சி. அது படைப்புக்குத்தாமே தவிர அதுக்கு என்ன செய்ய முடியும்; இருக்கத வச்சித்தாம் சமாளிக்கணும்ன்னு, காலங்கழிஞ்சது.

ஒரு நா அவங்க – புருசனும் பெண்டாட்டியும் – வயலுக்குப் போயிட்டு வர்ற வழியில வண்ணாந்துறை இருந்தது. அந்த சமயம் கழுதக மாசம். ( நாய்களுக்கு ன்னு மாசம் இருக்கத மாதிரி கழுதைகளுக்கும் இன்ன மாசம்ன்னு இருக்கு) கூடவே நடந்து வந்து கீட்டிருந்த பொஞ்சாதி என்னத்த அப்பிடி அதிசயமா நின்னு பாக்கான்னு சம்சாரி திரும்பிப்பார்த்தாரு.

அட செ; இதுதானா ன்னு சொல்லி, நம்ம ராமயாபயலுக்குப் பாக்கணுமெ; அடேய்யப்பா என்று வாய் தவறி சொல்லிப் போட்டாரு!

ராமயாப் பயங்கிறது அவங்க வீட்டுல மாடு மேய்க்கிறவன்; பெறகுதாம் தெரிஞ்சது அவருக்கு, இதப் போயி நாம இவகிட்ட சொல்லீருக்கப்படாதுன்னுட்டு!

சொன்னது சொல்லியாச்சி; என்ன எளவு கூட்ட . அவருக்கும் அது ஒரு உறுத்தலா இருந்தது; யாரிட்டயாவது சொல்லித் தீக்கணுமெ. ராமயாப்பயல் சின்ன வயசுல வந்து மாடு மேய்க்க சேர்ந்தவன். இப்பொ இளவட்டம் ஆகியுங்கூட மாடு தான் மேக்கான். வேற ஒண்ணுக்கும் அவன் லாயக்கு இல்லாம இருந்தாம். "போட்டாத் திம்பாம் அத்துனா செமப்பான்ங்கிற "சொலவம் அவனுக்குத்தான் செல்லும்.

வீட்டுக்குப் பெறத்தால மாட்டுத் தொழு. ராத்திரி ஒருவேளைக்குக் கூளம்போட அவருதாம் போவாரு. பகல்ல முதலாளியம்மாதான் (சம்சாரியோட சம்சாரம்) மாடுகளுக்குக் கூளம் போடுறது.

ராத்திரிக்கு அந்தப் பக்கம் போகப்படாதுங்கிற உத்தரவு முதலாளியம்மாவுக்கு!

ராத்திரி ஒரு வேளையில் இவருதான் லாந்தலை எடுத்துக்கிட்டு அங்கெ கூளம் போடப் போவாரு. ராமயாப்பயல் கூளத்துக்குப் பக்கதுலதாம் ஒரு சாக்க விரிச்சிப் படுத்துக்கிடப்பாம். படுத்தா பிரேதந்தான். பூகம்பம் வந்தாலுங்கூட எழுந்திருக்க மாட்டாம். சம்சாரி ராத்திரிச் சாப்பாட்ட முடிச்சிட்டு தொம்ராக் கட்டுல்ல காலநீட்டிப் படுத்துக்கிடப்பாரு. ராமயாப் பயல் அவருக்குக் காலை பிடிச்சி விடுவாம். வீட்டெ. அடுப்பங்கூடத்த ஒதுங்க வச்சிட்டு முதலாளியம்மா வார வரைக்கும். வந்து பாத்ததும் அவளுக்கு சிரிப்பாணி அள்ளும்! ராமயாப் பயல் கண்ணெ மூடித் தூங்கிட்டே அவரோட காலப் பிடிக்கிற 'அளகு' அப்படி இருக்கும்.

லாந்தல எடுத்துகிட்டு கூளம் போடப் போகிறவருக்கு தினோம் தர்மதர்சனம் கிடைக்கும். இந்த 'அகோச்சரத்த' எங்கயும் போயிப் பாக்க முடியுமா!

போனதும் ஒரு மிதி கிடைக்கும் அவனுக்கு. திடுக்கிட்டு முழிப்பாம். 'வேட்டிய நல்லா இழுத்து மூடிக்கிட்டுத் தூங்குலெ மூதி'ன்று தினமும் சொல்றதையே சொல்லுவாரு.

சம்சாரி அன்னைக்கு சொன்னதுலயிருந்து அவரோட சம்சாரத்துக்கு மனசுல 'தெண்டு' விழுந்து போச்சி. பாக்கணுமென்னுட்டு. எப்படிப் பாக்கன்னுட்டுத்தான் தெரியல. அவ இப்ப அவனப் பாக்குற பார்வையே வித்தியாசமாயிரிச்சி.

அவன நல்லா கவனிக்க ஆரம்பிச்சா. கூட ஒரு வெஞ்சனம் வச்சி கஞ்சி ஊத்துனா. சோறு வைக்கும் போது 'ராமயா. லே நல்லா வாங்கிச் சாப்பிடு; வெக்கப்படாதலெ, என்று உபசரிச்சா. ஆதரவில்லாத அவனுக்கு அப்பிடி ஒரு ஆதரவு கிடைச்சது ஒரு எதமா இருந்தது.

சம்சாரி, சந்தைக்கு மாடுபிடிக்கப் போனாரு. திரும்ப எப்பிடியும் ஒருவாரம் பத்துநா ஆகும்.

போகும்போது சம்சாரத்திட்ட, ராமய்யாப்பயல் ராத்திரிக்கு வெளித்திண்ணையில் வந்து படுத்துக்கிட்டட்டும்' ன்னு யாவகமாச் சொல்லீட்டுப் போனாரு.

ராத்திரி யாச்சி.

ராமயா பய சாப்ட்டுட்டாம். கால்கை பிடிக்க வேண்டிய சோலி இல்லெ. நிம்மதியா கட்டை சாய்க்கலாம்ன்னு தொழுவப்பாத்து ஒரு கந்தல் சாக்கெ எடுத்துக்கிட்டுப் புறப்பட்டுப் போக ஆரம்பிச்சதும் 'லே ராமயா நீ இன்னிக்குத் தொழுவுல படுக்கேண்டாம். முதலாளி ஊர்ல இல்லெ. நீ உள் திண்ணையில படுத்துக்க. ஊர்ல திருட்டுப் பயம் அதிகமா இருக்கு. சத்தங்கொடுத்நா எந்திரிச்சி ஓடியாருவாயாலெ' என்று கேட்டாள் சிரிச்சிக்கிட்டே.

வருவேங்கற மாதிரி தலைய ஆட்டுனாம்.

அந்த சாக்கத் தூரப்போட்டுட்டு அந்த நல்ல சாக்க எடுத்துக்கொன்னா. அவனுக்கு ரொம்ப சந்தோஷம்; விரிச்சிப் படுக்க நல்ல புதூச் சாக்கு கிடைச்சது. சாப்புட்டதும் அப்பிடியேத் தூங்கலாம்; கால்கை பிடிச்சிவிடுற ரோதனையும் இண்ணைக்கு இல்லெ.

முதலாளியம்மா அடுப்பங்கூடத்த ஒதுங்க வச்சி, எல்லாத்தையும் வச்சி மூடி கதவுக சன்னல்க எல்லாம் சரியா மூடியிருக்கா, தாப்பால்லாம் சரியாப் போட்டுருக்கான்னு லாந்தலத் தூக்கிட்டுப் போயி சரிபார்த்துட்டு வந்து பாக்குறப்பொ எல்லாம் சரியாத்தான் மூடியிருக்கு; ராமயாப் பயலைத்தவிர!

முதலாளியம்மா தோம்ராக் கட்டுல்ல போயிப் படுத்தா.

தூக்கம் வல்லெ.

லாந்தல சுருக்கி வைக்க மறந்து போயி படுத்துக் கிட்டது தெரிஞ்சது.

லாந்தல சுருக்கி வைக்கப் எழுந்திருச்சிப் போனவ சுருக்கி வைக்காம எடுத்துக்கிட்டு. திரும்பவும் போயி அந்த கங்காச்சி'யப்

பாத்தா.

கொடுவாயி வழியிது; அப்பிடி தூங்குதாம்.

வெலகிக்கிடந்த துணிய எடுத்து மூடிட்டு அவனெ எழுப்புனா. பதறியடிச்சி எந்திரிச்சாம். திருடங்கிருடன் வந்துட்டானோ என்னமோ ன்னுட்டு.

லே, ராமயா வீட்டுக்குள்ள பூச்சியோ பொட்டோ என்ன எளவோ கல கலன்னு சத்தங்கேட்டுக்கிட்டு பயமா இருக்கு. நீ உள்ள வந்து படுத்துக்க ன்னு கூட்டிட்டுப் போயி, கட்டுலுக்குக் கீழே பக்கத்துல படுத்துக்கிடச் சொன்னா.

சரீன்னுட்டு வந்து சாக்கெ விரிச்சுப் படுத்துக்கிட்டாம்.

தூக்கங்கலைஞ்சது. ஒரு பக்கம் பூச்சியோ (பாம்பு) என்ன எளவோ இருக்குமோன்னு மொதலாளியம்மா சொன்னது, தூக்கங்கலைஞ்சி போச்சி. தலமாட்டுல ஒரு கம்பையாவது எடுத்துவச்சிப் படுத்தோமில்லியே ன்னு ரோசனை பண்ணிட்டிருந்தப்ப, லே ராமயா, கை காலெல்லாம் வலிக்கிடேய்; கொஞ்சம் காலப்பிடிச்சி விடேம் ன்று சொல்லுதா.

மொதலாளியம்மா சொன்னாத் தட்ட முடியுமா?

எந்திரிச்சாம்.

அந்த லாந்தல இன்னுங் கொஞ்சம் சுருக்குன்னா. இவனுக்கு சுருக்கி வச்சிப் பழக்கமில்லாதது னால, முதல்ல தூண்டுனாம்.

சுருக்கு சுருக்கு ன்னா.

சுருக்குனாம்.

அணைச்சி போச்சி.

சரி போட்டும்; பொருத்திக்கிடலாம் பெறவுன்னா. இருட்ல சரியாத் தெரியல ஒண்ணும்.

தட்டுண்டு தடுமாறி தடவிக்கிட்டே வந்து தொடாத எடுத்துல கை தவறித் தொட்டு, இப்பிடியா ஒருவடியா வந்து, கட்டுல்ல கெடந்த மொதலாளியம்மா வோட காலு எங்கருக்கு ன்னு தடவிக் கண்டுபிடிக்கறதுக்குள்ள பயலுக்கு 'தவிடுதாங்கி'ப் போயிட்டது!

கொஞ்சம் எரிச்சலா சொன்னா மொதலாளியம்மா.

'ஏலே இந்த வேட்டியத் தொவச்சி எத்தன நாளாச்சிலெ; வீச்சம் பொறுக்கல' ன்னா.

இருட்டுதானென்னுட்டு. அவகளுக்குத் தொந்தரவா

இருக்கப்படாதேன்னு அவுத்து எறிஞ்சிட்டாம். எறிஞ்சிட்டு, திரும்பவும் காலு எங்க இருக்குன்னு தொளாவுனாம். அவ வேணுமினுட்டே காலச் சுருக்கிக்கிட்டா! வேட்டியத் தூரப் போட்டுட்டயா ன்னு கேட்டு சரி பார்ப்பதற்காக அவனைத் தடவி சரிபாத்தா. அப்பதாம் அவரு சொன்னது ரொம்ப ரொம்ப சரீன்னு பட்டது! லே கழுதப் பயலேன்னா, செல்லமா.

●

சம்சாரி மொதலாளி சந்தைக்குப் போய் புதுமாடுக பிடிச்சிக்கிட்டு நாலு நாள்ளெ சீக்கிரமே வந்து சேந்தாரு.

சம்சாரி சந்தையிலிருந்து மாடுக பிடிச்சிக்கிட்டு வந்தாரு. வந்து பாத்தா,

பயல் ராமயா சுதாரிப்பா அலையுதான்.

பாத்ததுமெ 'பக்' குன்னது அவருக்கு.

இன்னதுன்னு சொல்லமுடியாத படிக்கு அவன் மாறி இருக்கது தெரிஞ்சது. அவம் மொகத்துல இருந்த அசட்டுக் களையக் காணம். ஓடி ஓடி வேல செய்யுதான். செ; மோசக் கேடு நடந்துபோச்சி போலுக்கேன்னு கவலையாயிட்டது; சம்சாரிக்கு.

அவருக்கே உண்டான தந்திர மூளை வேலை செஞ்சது.

சம்சாரத்த கவனிக்க ஆரம்பிச்சாரு. அவள்ட்டெ இருந்து ஒண்ணுந் தெரிஞ்சிகிட முடியல. அவ எப்பவும் போலதாம் இருந்தா. எப்பவும் போலதாம் இவரோட நெருக்கமா அன்யோன்யமா மனசுவிட்டுப் பழகுறா. ஒரு நா நெருக்கமா இருந்தப்ப,

ஏட்டி இந்தப் பயலக் கவனிச்சயா; அவம் போக்கும் திரிச்சலும்? ன்னு கேட்டாரு.

யாரு... இந்த வெறகு போடுற நைனாரு பயலச் சொல்லுதீளா; அவம் முந்திய மாதிரி சரியா வேல செய்யிறதில்லங்க ன்னா.

அட இவளே; நா அவனச் சொல்லல. நம்ம ராமையாப் பயலச் சொன்னேம்.

ஆமாங்க ஆமாங்க நானும் கவனிச்சேம். அது என்னான்னு தெரியலையெ. மாடு மேய்க்கப் போன எடத்துல ஏதாச்சும் காணாததெக் கண்டுக்கிட்டானோ என்னமொன்னா.

காணாதே ன்னு எதைச் சொல்லுதெ.

அதாங்க அன்னெக்கு நீங்க சொன்னீளே "களுதெ" ன்னுட்டு.

இந்த களுதைக்கு அங்கான ஏதாச்சும் ஒரு களுத கெடைச்சிருக்குமோ என்னமோ என்று சொல்லி அவரு மேல விழுந்து குடு குடுகுடு ன்னு சிரிச்சா.

சரி; இவள்டெ இருந்து ஒண்ணுங் கண்டுடிக்க முடியாதுன்னுட்டு. நே...ர கொசகுடிக்குப் போனாரு. வேளாரக் கூப்ட்டு. கையி நொழைய முடியாதபடிக்கு ஒரு கலயம் செஞ்சி குடுன்னு கேட்டாரு.

அது என்னத்துக்கு மொதலாளீன்னு வேளாரு கேக்க,

அட, சொல்ற படி செஞ்சி குடுப்பா. கோயிலுக்கு அப்பிடி ஒரு நேமகம்ன்னதும். 'மூச்சுவிடாம' சரீன்னுட்டாம்.

செஞ்சி வச்சிரு நாவந்து வாங்கிக்கிடுதேம். ன்னு சொல்லி ஒன்னுக்கு ரெண்டா துட்டு குடுத்தாரு.

அன்னிக்கு ராமயாப் பய மத்தியானத்துக்கு கஞ்சி கொண்டு போகலெ. நீ போடேய்; நா மத்தியானம் அந்தக் காட்டுக்குத்தாம் உழ வருவேம். நாங் கொண்டாரேம்ன்னு அவனெ அனுப்பிச்சிட்டாரு.

அங்கெ வேளாரு,

கோயிலுக்கு நேமகம் ன்னு இவரு சொல்லி யிருக்காரென்னுட்டு. குளிச்சி தலெ முழுவி ரொம்ப ஆச்சாரம்மாப் போயி மண்ணெடுத்துட்டு வந்து ரொம்ப பக்தியா அந்த மண்ணைக் கொளச்சி, இவரு சொன்னது கெணக்கவே செஞ்சி வச்சிக்கிட்டு, மொதலாளி எப்ப வருவாருன்னு காத்துக்கிட்டிருக்காரு.

வேளாரோட சம்சாரம் வேளார சர்வகேலி பண்ணுதா, அந்த கழுத்து நீண்டிருக்கிற ஏனத்தெக் காமிச்சு, ஒமக்கு இனி இதுதாம் பொஞ்சாதி இதயெ வச்சிக்கிரும்னு சொல்லிச் சொல்லி சிரிக்கா!

பிறகு.

மொதலாளி வந்தாரு. அதெ வாங்கி, மறைச்சி கொண்டுபோயி சம்சாரத்துக்குத் தெரியாம அதுலெ கஞ்சி ஊத்திக்கொண்டு போனாரு காட்டுக்கு.

அங்க ராமயாப்பய கஞ்சி எப்ப வருன்னு காத்துக்கிட்டிருக்காம்.

இவரு வேணும்ன்னுட்டே தாயமாட்டுப் பண்ணி, மெள்ள ஆடி அசைஞ்சி போயி அந்தக் கஞ்சிக் கலயத்தெ ஒரு மரத்துக்கடியில வச்சிக்கிட்டு,

லே ராமயா கஞ்சி குடிச்சிட்டுப்பொ; பசியா இருப்பென்னு ரொம்பப் பிரியமா அழைக்காரு.

பய வந்தாம்.

கஞ்சிக் கலயம் புதுசா இருக்கு.

பாத்தாம். அவனுக்கு அது 'அலுவசமா' இருந்தது.

என்ன மொதளாளி இது! கை மொளையாத (நுழையாத) ஏனத்துல கஞ்சி கொண்டு வந்திருக்கீக ன்னு கேட்டாம்.

ஏலே நீ சாமானியப்பட்ட ஆளா; காத்து மொளையாத எடத்துல எல்லாம் கைய வச்சிருக்கயே இதுக்குள்ளெ கைய நொளைக்கிறதுக்கு என்னடா ன்னாரு!

பய அவர மெரண்டு பாத்தாம். வெவரம் புரிஞ்சுப் போச்சி, அவருக்கு; இனி இங்கெ நின்னாலெ ஆபத்துன்னு பிடிச்சாம் ஓட்டம்.

சம்சாரி மாடுகளை யெல்லாம் திரட்டிப் பத்திட்டு வந்தாரு வீட்டுக்கு. அவனெ எங்கெ காணம்; நீங்க பத்திக்கிட்டு வாரீயென்னு கேட்டா, அவரோட சம்சாரம்.

நீ சொன்ன கதெதாம் நடந்திருக்கும் போலுக்கு! களுதெ களுதயத் தேடிகிட்டுப் போயிட்டது; கவலய விடு ன்னுட்டாரு.

இந்தக் கதையின் முடிவை வேற மாதிரியும் சொல்கிறார்கள்;

ராமயாப் பயல் உழுது கொண்டிருந்ததாகவும், ஓட்டம் பிடித்தபோது சம்சாரியும் பின்னாலேயே ஓடிக்கொண்டு,

ஏலே ராமயா ஓடாதலெ, நில்லுலெ நில்லுலெ.

கொறையும் உழணும்; வீட்டுல ஒழப்புனாலும் ஒழப்பிட்டுப்பொ. காட்ல இப்பிடி அறையுங் கொறையுமா ஒழப்பிட்டுப் போறியேடா ராசா ன்னு சொல்லிக் கொண்டே அவனைத் தொடர்ந்து ஓடி, போய்ப் பிடித்துக் கொண்டு வந்ததாயும் சில இடங்களில் சொல்லப் படுகிறது.

ஒரு ஊர்ல ஒரு நொண்டி இருந்தான். பிறவியிலயே நொண்டியாய் பிறக்கலை; மத்தியிலதான் அப்பிடி ஆயிட்டது. பெரிய கல்த்தூண் விழுந்து முழங்காலுக்குக் கீழெ கணுக்காலுக்கு மேலெ துண்டாப் போயிட்டது. ஆள் பொழைச்சது மறு பொழைப்பு.

ஒடிஞ்ச இடத்தில கால் சூம்பி வாழைப் பூ மாதிரி ஆயிட்டது. நாலுபேத்தப் போல நடமாட முடியல. ரெண்டு கக்கத்துலயும் கட்டைகளை இடுக்கிட்டு எப்பிடியோ சமாளிச்சி நடந்தாம்.

நிலபுலம் ஒண்ணுங் கெடையாது. ஆதரிக்க ஆள் இல்லெ. வேல செய்யவும் ஏலாது. வளந்து வாலிபமாயிட்டாம். அனாதப்பயலுக்கு யாரு பொண்ணு குடுப்பா; எவதான் கட்டுவா. காலுதான் ஊனம்; அதுக்காக பொம்பள ஆசையில்லாம இருக்குமா? அதே ஏக்கத்துல அந்த ஆசெ அதிகமாயிட்டே வருது; பெயலுக்கு என்ன செய்யிறதுன்னுட்டுத் தெரியல.

ஒரு நா ஒரு பொழுதாவது பொம்பள சொகத்தை அனுபவிச்சே ஆகணும்ன்னு தீர்மானிச்சாம். சாப்பாட்டுக்கில்லெ; வகுறு பசிக்கி தாயே ஒரு கை சோறு போடுன்னு கேக்கலாம். போடுவாக. வேட்டிகிழிஞ்சி போச்சி, மறு வேட்டிக்கு வழியில்லெ; அய்யா ஒரு பழைய்ய வேட்டி குடுங்கன்னு கேக்கலாம் கொடுப்பாக, கொடுத்திருக்கா இதெல்லாம்.

ஆனா, "ஆசை"யா இருக்கு, யம்மா ஒரு தேறத்துக்கு வாயேம்ன்னா எவ வருவா. யாரிட்ட போவேன்; எவகிட்டெச் சொல்லுவேம்ன்னு அழுதாம்.

கடேசியில மனசு தேறி, ஒரு தவங்கிப் போன யாரும் விரும்பிப் போகாத ஒரு வேசிட்டப் போயி,

தாயி, ஏம் பாடு இப்பிடி. நா வேற யாரிட்டப் போயி சொல்ல முடியும்? இதெ ஒரு தருமம்னு வச்சிக்கொ கொஞ்சம் மனசு பண்ணுன்னு கெஞ்சினாம்.

யப்பா, நீ சொல்லுததெல்லாம் சரிதாம்.

ஒனக்கு நா ஒரு ஒத்தாச பண்ணலாம். எங்க தொழிலு தருமம்ன்னு ஒண்ணு இருக்கு. யாரிட்டயும் நாங்க பைசா வாங்காம முந்தி விரிக்கப்படாதுன்னு இருக்கெ; நா என்ன

பண்ணுவேம். நானும் ஒம்போல இப்ப பாவப்பட்டவதாம். ஒனக்காச்சுட்டி ஒண்ணு பண்ரேன். பேருக்கு ஒத்த ரூவா கொண்டா. ஏதோ நீ வயசுப்புள்ளெ ஆசெப்பட்டுட்டெ. ஆசெப்பட்டது ஊசிப்போகப் படாதுன்னு எங்கள்ளெ சொல்லுவாக. நா இப்பிடி சொல்லுதேம்ன்னு வருத்தப்பட்டுக்கிடாத ராசா. போயிட்டு, ரூவாயோட வந்துசேருன்னுட்டா.

பாத்தாம். ஒத்த ரூவாதானெ. இதெ எப்படியும் சேத்துருவேம்ன்னு வாயக்கட்டி, வயித்தக் கட்டி பைசா பைசாவா பிச்சை எடுத்த பணத்துல மிச்சம் வச்சி கொஞ்ச நாள்ள சேத்துட்டாம். அதெக் கொண்டுக்கிட்டு அவ வீட்டுக்குப் போனாம்.

வாய்யா வா; கொண்டாந்தயான்னு கேட்டா.

கொடுத்தாம்.

வாங்கி முடிஞ்சிக்கிட்டா.

கட்டைகளெ இடுக்கிக்கிட்டே வீட்டுக்குள்ள வந்தாம்.

விளக்க அணைச்சா. தரையில அவ பாயில படுத்துக்கிட்டு, கட்டைகள அந்த மூலையில சாத்தீ வச்சிட்டு, பாத்து பைய்ய வான்னா.

அதுபடியே வந்தாம். வார சந்தோசத்துல பயலுக்கு காலுதடுமாறிட்டது இருட்டுக்குள்ளெ. லம்பி விழப்போனவன், வாழைப்பூபோல சூம்பிப்போன கால ஊணி நிசானிச்சதும் அப்பிடியே இரி அப்பிடியே இரி ன்னு அவ சந்தோசமா கத்துனா.

பெறகு சொன்னா... எய்யா ஒனக்கு இம்புட்டு விசேசமா அமைஞ்சிருக்கு மின்னுட்டுத் தெரியாதே. ஏம் ஆயுசுல நானும் எத்தனையோ பாத்திருக்கேம்; எனக்கு இம்புட்டுப் பொருத்தமா அமைஞ்சதில்லையே பாதகத்திக்கு. இப்பிடி மொதவே தெரிஞ்சிருந்தா ஓங்கிட்ட இந்த ஒத்த ரூவாயே வாங்கிருக்க மாட்டெனெ. இனிமெ நீ ஒண்ணுந் தரவே வேண்டாம். தெனேம்வா; ஒனக்கு சவுகரியப்பட்ட போதல்லாம்வா ன்னு பொலம்பிக்கிட்டே இருக்கா.

இந்தப் பயலுக்கு ஒண்ணும் விளங்கல! ரொம்ப நேரங்கழிச்சி ஒருபாடு வெளங்கிக்கிட்டாம்!!

நொண்டிக்காலு நொண்டிக்காலுன்னு சொன்னாங்க என்னெ. இந்த நொண்டிக்காலுக்கும் இப்பிடி ஒரு உவயோகம்.

இப்பிடி இருக்கும்ன்னு யாருக்காவது தெரியுமான்னு நெனச்சப்ப பயலுக்கு சிரிப்புதாம் வந்ததாம்.

## 20

ஒரு வியாபாரி இருந்தான். கடல் தாண்டிப் போய் சம்பாதிச்சு வந்தவன். அவனுக்குக் கல்யாணம் வந்தது. 'நாந்தாரேம் பொண்ணு நீதாரேம் பொண்ணுன்னு போட்டிபோட்டுக்கிட்டு பொண்ணு கொடுக்க வந்தாங்க. கடேசியில நிச்சயமானது நல்ல அழகான அறிவான பொண்ணு. அவளுக்கு அழிப்பாங்கதை போடுறதிலேயும், இட்டுக்கட்டிப் பாட்டுப் பாடுறதுலேயும் ரொம்ப இஷ்டம். அதோட அவளுக்குக் காதல் விளையாட்டுன்னா ரொம்ப ரொம்ப இஷ்டம்.

அவளுக்கு எதெல்லாம் இஷ்டமோ அதெல்லாம் பிடிக்காது அவளோட புருசனுக்கு. அவனுக்கு ஒரே இஷ்டம் துட்டுதான். மத்தியில மத்தியில அவனுக்குப் பொண்டாட்டி வேணும்; அவ்வளவுதான்.

கலியாணம் ஆன புதுசுல ஒரு ராத்திரி இடைவேளையில் நாஒரு அழிப்பாங்கத போடட்டுமான்னு கேட்டா புருசங்கிட்டெ. போடுன்னாம்.

அடி பருத்து
நுனி சிறுத்து
ஆட்டம் புழுக்கை போலிருக்கும் – அது
ஊரார் எல்லாம்
சூம்பும் கொட்டை என்ன கொட்டை! ன்னு கேட்டா அவங்கிட்ட.

என்ன்து, இன்னொரு தபா சொல்லுன்னு கேட்டாம்; சொன்னா.

'என்னது... ம்; மாங்கொட்டையா' ன்னு கேட்டாம் அவகிட்டெ.

கலீர்னு சிரிச்சி, இல்லெங்கிற மாதரி தலையசைச்சா.

தெரியலையா; ம் தெரியலெ? ன்னு கேட்டு அவம் முகத்தெ இழுத்து மார்ல பதிச்சு இதுதாம் ன்னா.

செ; நீ என்னெ ரொம்ப 'இது' வா வெடி (அழிப்பாங்கதெ)

போடுதெ. நல்லதா ஒண்ணு போடப்படாதான்னு கேட்டாம். சரி; போடுதேன். அதயாவது அழிப்பீங்களான்னு கேட்டா. சரீன்னாம்.

கப்பு பிளந்திருக்க

கறுங்கோலை முன்னெ விட்டு

விட்டு விட்டு எடுத்தா

பொட்டுப் பொட்டா

தண்ணி வடியும்

அது என்னா ன்னு கேட்டா.

செ. அத விட இது ரொம்ப மோசமாயில்ல இருக்கு ன்னாம்.

மோசமாவே நெனைச்சிப் பாத்தா மோசமாத்தான் தெரியும்.

தெலா இறைக்கிறத (ஏற்றம்) பாத்ததில்லியா நீங்க ன்னு கேட்டா.

இப்படியான அழிப்பாங்கதைக, சொலவடைக நெறைய வச்சிருந்தா அவ.

அவனுக்கு இதில எல்லாம் ரசிப்பு கொஞ்சங்கூட இல்ல. ஆனா அவளுக்கு இப்படியான ரசிப்பு இருக்கற துணை வேண்டியிருந்தது. இந்த வெளையாட்டுகள்ள அளவுகடந்த ஆசெ இருந்தது அவளுக்கு.

கொஞ்சநாக் கழிச்சு அவன் கடலைத் தாண்டி சம்பாரிக்கப் போயிட்டாம். இவளுக்கு என்ன செய்றதுன்னுட்டுத் தெரியல. எத்தினி நாதான் 'ஏங் கொரங்கேன்னு' இருப்பா. அவ தேடுன துணை கிடைச்சது.

அதுக்குன்னு ஒருத்தம் வந்து சேந்தாம். அவன சேத்துக்கிட்டா.

மொத நா; அவங்கிட்ட ஒரு அழிப்பாங்கதெ போட்டா.

காரூரு கரு மணலு

கருத்த கம்பளி விரிச்சி

அவளும் அவனும் இருக்க

அவ காட்ட

அவம் நீட்ட

அவ நோவுது நோவுதுன்னா

அவம் போவுது போவுதுன்னாம்

அது என்ன ன்னு கேட்டதும், அவம் பட்டுன்னு பதில்

சொன்னாம்;

இது கூடத் தெரியாதா ன்னு

திரிஞ்சா சொல்லு ன்னு கேட்டா.

ஒரு வளையல் யாவாரி கம்பளி விரிச்சி அதுல வளவிகளவச்சி யாவாரம் பண்ணுதான். அதுல உக்காந்து ஒரு பொண்ணுக்கு அவம் வளவி தொடுறதச் சொல்லுது இந்த அழிப்பாங்கதென்னாம்.

அவளுக்கு சந்தோசம் ஆயிருச்சி.

இப்பிடி அவங்க ஒருத்தருக்கொருத்தரு கதெ போடுறதும் அழிக்கதுமா ரொம்ப இஷ்டமா இருந்தாங்க.

நெதம் வந்துருவாம் அவளப்பாக்க. அவனப்பாக்காம அவளாலயும் இருக்க முடியாது. இப்பிடி அவங்க ரொம்ப இஷ்டமா இருந்துக்கிட்டிருந்த நாளில,

கடல்தாண்டி சம்பாரிக்கப் போன புருசன் ஒருநா எதிர்பாராம திடீர்னு வந்துட்டாம்.

புருசன் வந்த வேளை கூடவே மழையும் வந்துட்டது.

அவ புருசனையும் எதிர்பார்க்கல; இப்பிடி கொட்ற மழையவும் எதிர்பாக்கல.

வந்த புருசன வரவேத்து உபசரிச்சா. அவசரமா அவனுக்கு வேண்டிய சமையலை கவனிச்சிட்க்கிடிருக்கிறப்பவே நல்லா இருட்டிட்டது. புருசனுக்கு சாப்பாடு பண்ணி வச்சா. அரங்கு வீட்டுக்குள்ள கட்டிலப்போட்டு படுக்கய விரிச்சிக் கொடுத்தா. இவ்வளவும் செஞ்சிக்கிட்டே இருந்தாலும் அவ காது பூராவும் தெருவுல வாற காலடிச்சத்தத்துலதாம் கவனமெல்லாம் இருக்கு.

புருஷன் வெத்தில போட்டுக்கிட்டே பொண்டாட்டி வரத்தெ எதிர்பாத்துக்கிட்டிருக்காம்.

இந்தா வந்துட்டேம் ன்னு சொல்லி வாசக்கதவ சாத்துற சாக்குல அங்கன கொஞ்சம் நின்னா.

தெருவுல மழை வெள்ளம் கணுக்கால முக்குற அளவுக்குப் போயிக்கிட்டிருக்கு. அந்த தண்ணியில காலவீசி நடந்துவாற சத்தத்தக்கண்டு புடுச்சிட்டா. காலடி வீட்டெ நெருங்கீட்டது.

அப்பொ இவ ஒரு பாட்டு பாடுனா.

நீருஞ் சலாரிட்டு வாரவரே

நெஞ்சுக்கு அஞ்சாதவம் மேலே உண்டு.

நீரும் கிட்டே வர வேண்டாம்

என்ன கதை இது

என்னோட கதைன்னு பாடுனா.

வாரவன் இவ பாடுனதக் கேட்டாம்; அப்பிடியே திரும்பிப் போயிட்டாம்.

இவ கதவச் சாத்தி தாப்பா போட்டுட்டு புருசங்கிட்ட வந்தா.

புருசனும் அவபாடுன அந்தப் பாட்டெக் கேட்டாம். பாட்டோட அர்த்தம் புரியல. அது என்ன பாட்டு அதோட அர்த்தம் எனக்கு தெரியல சொல்லு ன்னு கேட்டாம்.

அவ சொன்னா;

தூண்டி(ல்) க்காரன் கரை மேல இருந்துக்கிட்டு

துண்டிய வீசிப் போடுதான். தூண்டி முள்ளுல

அப்பதாங் கோர்த்துப் போட்ட புழு இன்னும் சாகல; துடிக்கி.

அப்ப ஒரு பெரிய மீனு வாலால தண்ணீர

சலார் சலார்ன்னு வீசி அடிச்சிக்கிட்டு வேகமா

இந்தப் புழுவ முழுங்க வருது. அப்ப அந்தப்

புழு, மீனப் பாத்து இப்பிடிச் சொல்லுது.

வாலால் தண்ணீரெ சலார்னு அடிச்சி

சத்தங் கொடுத்துகிட்டு வார மீனே, நெஞ்சுக்கு

அஞ்சாத தூண்டில்காரன் மேலே இருக்காம் ன்னு

அர்த்தம் ன்னு சொன்னா

அது சரி; என்ன கதெ, இது என்னோட கதைன்னு பாடுனயே?

ஓ அதுவா, அப்படியா நீ வந்தியானா, இந்தத் தூண்டி முள்ளுல மாட்டீட்டு துடிச்சிச் சாகப் போறேனே நா; அந்த என்னோட கதெ தாம் ஒனக்கும் ன்னு அந்தப் புழு சொல்லுதுன்னா.

எப்பேர்ப்பட்ட கெட்டிக்காரியா இருக்கா நம்ம பொண்டாட்டின்னு அப்பிடியே மகிந்து போனானாம் புருசங்காரன்.

# 21

'பெருசு' கதெ சொல்லத் தொடங்கினாரு, அதுக்குப் பிறகு மழை பெஞ்சுக்கிட்டிருந்ததால மடத்துல கூட்டம் இருந்தது. 'கூட்டங்கூடுனா குசுவுங்கூடும்' ங்கறது சொலவம். எவண்டா நசுக்குனதுன்னு கேட்டாரு பெருசு. யாரு ஒப்புக் கொள்ளுவா. நா இல்லெ நீயில்லென்னாங்க. கண்டுபுடிக்க மந்திரம் இருக்குடான்னு ராமய்யக்கவுண்டர் ஆரம்பிச்சாரு. ஆட்காட்டி விரலை ஆகாசத்துக்கு நேரா காமிச்சு, "உச்சீல இருந்து" ன்னு தொடங்கி "ஒரு மௌகு" ன்னு தன்னைத் தொட்டு அதுக்குப் பிறகு வரிசெயா ஒவ்வொருத்தரையுங் காமிச்சி சொல்லிக் கிட்டே போனாரு; இரு மௌகு தாச்சிக்கா.

மாச்சிகா

மச்சிகா

மானிக்கா

குச்சிக்கா

குசுவிக்கா

என்று பெரிசுவைக் காமிச்சி, அடுத்துச் சொல்ல வேண்டிய 'குடிச்சிக்க' என்கிறத சொல்லாம நிறுத்திக்கிட்டாரு. காரணம் அதுக்கு நேரா இருந்தவரு அம்பலக்காரரு. எப்பிடிச் சொல்ல; அதோடு

அவரு முன்கோவி! ஆனாலும் சிரிச்சாங்க எல்லாரும் ; அவரும் சிரிச்சாரு.

எவம் நசுக்கி விட்டானோ அது ஏந்தலையில வந்து விடிஞ்சிருக்கு என்று பெரிசு சிரிச்சுக்கிட்டே, 'அதுஞ் சொன்னாம்'.

தடிக்குசு போடுரா தரும ராசா

நசுக்கி விடாதரா' நாசகாலா' ன்னுட்டு.

நெசமாப் போட்டதே ராமயக்கவுண்டராத்தினிருக்கணும்; ஏன்னா, அவருதானெ ஆரம்பிச்சாரு. மந்திரத்தெ? ன்னு பெருசு சொல்லவும் எல்லாரும் பலமா சிரிச்சாங்க.

சரி; எது எப்பிடியோ; அது ஒம்ம தலையில வந்து நின்னுட்டது. அதுக்கு இப்பொ நீரு ஒரு பரிகாரம் பண்ணீற வேண்டியதுதாம்ன்னு ராமயக்கவுண்டரு அம்பலக்காரரைப் பார்த்ததும், அவரும் அது சரிதாம்னு தலையெ ஆட்டுனாரு.

பெருசும் கதெ சொல்லத் தொடங்கிட்டாரு.

ஒலகத்துல நரல் (மக்கள் தொகை) ரொம்பத்தான் பெருத்துப்போச்சி. இப்பிடி கூட்டம் அதிகமாயிட்டே போனா, பூமா தேவி பாரம் தாங்க முடியாம முந்தியப் போல கடவுள்ட்ட முறையிட வேண்டியதுதாம் வரும்.

என்னதாம் “சண்டை” (உலகமாப் பெரும்போர்) வந்தாலும் எத்தனெதாம் விபத்துக நடந்தாலும் நரல் குறைய மாட்டேங்குதப்பா! இந்தப் பயபுள்ளக அதவிட வேகமாகப் பெத்துத் தள்ளிக்கிட்டே இருக்கு.

எங்க காலத்துல – அதாம் அந்தக் காலத்துல – பொம்பளென்னு இருந்தா பிள்ளெப் பெறுததுதாம் தொழிலா இருந்தது. இதுக்கும் அந்தப் பயபுள்ளக ஆடிக்கொருக்க அம்மாசைக் கொருக்காம் படுத்து எந்திருக்கது! சட்டோர்ன்னு கரு பிடிச்சிரும். இதுல பள்ளை ஆடுகபோல ரெட்டைப் பிளைகளா வேற பெத்துப் போட்டுக்கிட்டே இருக்கும் ஒவ்வொவ்வொண்ணு!

இப்பிடித்தான் ஒரு சம்சாரிக்கு ரெட்டைப் பிளைகளா பிறந்துக்கிட்டிருந்தது. வீடு கொள்ளல; ரொம்ப சின்ன வீடு. உருண்டு பெறண்டு படுக்க முடியல. நண்டு நசுக்காணிகளாமா பத்து இருவதுன்னுட்டுக் கிடந்து கும்மரிச்சம் போட்டுச்சுன்னா எப்பிடி இருக்கும்! அவம் பொண்டாக்கி கீழே ஒண்ணு மேலே ரெண்டு இடுப்புல ஒண்ணு வயத்துலே ரெண்டு இப்டியா அல்லல் பட்டிட்டிருந்தா. எப்பப் பாரு, வீட்டுக்குள்ள தலைய நீட்டுனா ‘பிரசவ வாடைத்தான்’ வீசும் எப்பப் பாத்தாலும்.

அலறிட்டாம் சம்சாரி!

இப்பிடி இருக்கிறப்ப, அந்த ஊருக்குப் பக்கத்துல இருக்க மலைக்கு ஒரு சாமியாரு வந்திருக்கிறதா கேள்விப்பட்டாம். அவரு பிள்ளை இல்லாதவங்களுக்குப் பிள்ளெ குடுக்கறதாயும்; பிள்ளெ வேண்டாம்ன்னு நெனக்கிறவங்களுக்கு பிள்ளையில்லா வரமும் .கொடுக்கிறதாயும் கேள்விப்பட்டு, சாமியாரைப் பாக்க மலைக்குப் போனாம் விருவிருன்னுட்டு.

கூட்டங் குறைஞ்ச வேளையில சாமியாரு கால்ல விழுந்தாம். எந்திரிப்பா; என்ன சங்கதின்னு சாமியாரு விசாரிச்சாரு. பய கதெயச் சொன்னாம்.

இம்புட்டுதானா, நா என்னமோ ஏதோன்னு நெனச்சேம். நா ஒரு வேரு தர்றேம். அதெ ஒரு நூல்ல கோர்த்து, நீ

பொண்டாட்டிக்கிட்ட படுக்கப் போறப்ப கட்டிக்கொ. இனிமொ ஒனக்கு பிள்ளெ பிறக்காது; கவலை விடுன்னு சொல்லி, வசம்பு மாதிரியுள்ள ஒரு பச்சிலைச் செடியோட வேர்ல, மஞ்சாடி அளவுக்கு நறுக்கி, அதெ அவங்கிட்டக் காமிச்சி, ஒரு நீளமான நூல எடுத்துக்க. அத ஊசியில கோர்த்து இதுக்குள்ள விட்டு இழுத்து, சாமியாரு தன்னோட இடதுகை ஆள்காட்டி விரல மட்டும் நீட்டிக்காட்டி இப்பிடி இதுல ஒட்டக் கட்டி முடிச்சிப் போட்டுக்க. மீதி நீளமான நூல அறணாக்கயித்தில சேத்து இப்பிடி கட்டிக்கோன்னு சொல்லி மணிக்கட்டைக் காமிச்சாரு.

திரும்பவும் ஒருக்க சாமியாரு கால்ல வுளுந்து கும்பிட்டு அந்த மஞ்சாடி அளவுள்ள வேர ரெண்டு கையவும்ஏந்தி வாங்கிக்கிட்டு புறப்படுறப்ப சாமியாரு யப்பா – ஆள்காட்டி விரலை நீட்டிக்காட்டி – வேரு கீழ்ப்பாக்க இருக்கும்படியா வச்சிக்கன்னு ஞாபகப்படுத்துனாரு. சரி சாமின்னு ஒரு கும்பிடு போட்டுட்டு விறுவிறுன்னு வேகமா வீட்டப் பாத்துப் போனாம். கதெ சொன்ன பெருசுக்கு இந்த இடத்துல கொஞ்சம் சிரிப்பு வந்தது.

அந்தக் கோட்டிப்பயபுள்ளெ, சாமியாரு சொன்னதுபோல செய்யிறோம்ன்னு நெனச்சி ''வசெபெசகா'' பண்ணிப்போட்டாம்! என்ன ஆச்சி; பொண்டாட்டி கர்ப்பமாயிட்டா!!

சாமியாரு யாத்திரை போயிட்டாரு. இவ வளக்கமா ரெட்டப் புள்ளெ பெர்றவ இந்தத்தபா நாலு புள்ளெ, நாலும் பொட்டப் புள்ளக பெத்துட்டா!!

வந்ததே கோவம் பயலுக்கு. வெட்டறுவாளெ எடுத்துக்கிட்டு, பொண்டாட்டிய ஒளி சாமியார வெட்டாம விடப் போறதில்லேன்னு வருமுறுத்திக்கிட்டு அலையுதாம்!

எல்லோரும் அவன சமாதானப் படுத்துனாங்க. யப்பா கோவப் படாதெ. அவங்கவங்களுக்கு எது போட்டிருக்கோ அதுதாம் நடக்கும். வயித்தியரு மருந்துதாம் கொடுப்பாரு; அவரு பத்தியம் இருப்பாரா? குண்மாகலெண்ணா அவரா பலி? ஒந்தலெ எழுத்துக்கு அவரெ நொந்து புண்ணியமில்லெ; அறுவாளைக் கீழேபோடுன்னு புடுங்கி ஒளிச்சு வச்சாக. திரும்பவும் சாமியாரு மலைக்குவந்திருக்கதாக் கேள்விப்பட்டுப் போனாம். ஏ கூறு கெட்ட சாமியாரே ஏங்குடியக் கெடுத்தியேன்னு கோவமாக் கேட்டாம். என்னப்பா சங்கதின்னு கேட்டாரு. வெவரஞ் சொன்னாம், சொன்னபடியே இடது கை

வெரல்ல கட்டுனது, மீதிநூல் அறணுக்கயித்துல கட்டிக்கிட்டது. மத்தது எல்லாத்தயும் நடந்தது நடந்தமானிக்கு ஒப்படச்சாம்.

அந்த சாமியாரு சிரிச்சு யாரும் பாத்ததில்லெ. அன்னைக்கு அப்பிடி சிரிச்சாரு! தலையில தலையில அடிச்சிக்கிட்டுச் சிரிச்சாரு.

பெறகு சொன்னாரு:

அட கோட்டிக்காரா, நா வெரல நீட்டிகாட்டுனா நீ அதெப் பிரிஞ்சுக்கிடுவேண்ணு நெனச்சேம். நீ நெசமாவே வெரல்ல கட்டிக்கிட்யாக்கும்! ஒனக்குப் புத்தி இல்லைன்னாலும் ஓம்பொண்டாட்டியாவது சொல்லியிருப்பாளேன்னாரு.

ஆமா சாமி அவளும் சொன்னா. நாந்தாம் ஒனக்கு அனயம் தெரியுமில்லெ; சாமியாரு வெரல்லதாம் கட்டிக்கிட்ச் சொன்னாருன்னு மறுத்து சொல்லீட்டேம்னு வருத்தப்பட்டாம்.

வருத்தப்பட்டு என்ன செய்ய; புத்தியோட பெளை, போன்னாரு.

அதுக்குப்பெறவு பயலுக்கு பிள்ளெக பெறக்கலைன்னாரு பெரிசு.

## 22

ஒரு ஊர்ல ஒரு அத்தக்கொத்துக் காரப் பெயல் இருந்தாம். அவனுக்கு நிலம் நீச்சி ஏதும் கிடையாது. அவனுக்கு ஆயும் இல்லை. அப்பனும் இல்ல. அனாதப் பெயலா இருந்தாம்.

கையில் நாலு காசு இருந்தா நாலு பேரு சொந்தங் கொண்டாடுவாங்க. வெங்கப் பெயலா இருக்கிறவனுக்கு சொந்தமேது பந்தமேது?

குடியிருக்க ஒரு குட்டிச்சுவரு (குடிசை வீடு) கூட இல்லாமல் இருந்தாம். அவன் கட்டியிருக்க கோவணங்கூட ஒட்டுக் கோவணந்தாம். அதிலயும் ஆயிரத்தெட்டு பொத்தல் இருந்திச்சி.

அட்டத் தரத்திரம் புடிச்ச பெயலா இருந்தாம். மலங்காட்டுக்குப் போயி விறகு வெட்டி அத வித்து காலச்சீவன் கழிச்சிக்கிட்டு இருந்தாம்.

அவனுக்கும் வயசு பெருகி; வாலிபமானாம், என்னது இருந்தாலும் இல்லாட்டாலும் பொண்டாட்டி இல்லாமத் தீருமா...? ஏதோ ஏழைக்கு தக்கன எள்ளுருண்டையா, அவன மாதிரியே, இல்லாத எளியவளா, ஒரு ஏழப் பொண்ணப் பார்த்து கட்டி வச்சாங்க...

ஆளுதா, ஏழையே தவிர மத்தப்படி அவ, மகாராணி கணக்கா இருந்தா. சேத்துல மொழச்ச செந்தாமர மாதிரி ஜொலிப்பா இருந்தா.

அவ கிழிஞ்ச சட்டதாம் போட்டிருந்தா. கிழிஞ்ச சட்ட வழியாத் தெரிஞ்ச அவளோட பருவ அழகப் பார்த்து அனேகம் பெயக... பெருமூச்சு விட்டாங்க...

ஒண்ணுக்கும் ஆகாத அந்தக் கொத்துக் காரப் பயலுக்கு அழகு ராணி கணக்கா பொண்ணு கிடச்சி இருக்கேன்னு பொறாம்முன்னாங்க...

புருசங்காரப்பெய தம் பொண்டாட்டியோட அழகப் பார்த்துப் பார்த்து பூரிச்சுப் போயிட்டாம், செப்புச் சில கணக்கா இருக்க தம் பொண்டாட்டி, கிட்ட இருந்தாப் போதும், சோறு தண்ணி கூட வேண்டாமுன்னு நினைச்சாம். அவம் பொண்டாட்டியோ "தாம் பெரிய அழகி, தன்னோட அழகக் கண்டு எல்லாப் பெயகளும் சொக்குதாங்க'' ன்னு நினைச்சிக்கிட்டு இருந்தா. அதனால ஏழ பாழையா ஆளும் அவலட்சனமா இருந்த கட்டுன புருசன கிட்ட வரவிடாம விரட்டுனா.

புருசங்காரப் பயலும் நமக்கு அவ சுகந்தராட்டாலும் பரவாயில்லை. அழகான பொண்ணுக்கு புருசங்கர மேவிலாசமே போதும்னு நினைச்சாம். அதனால பெண்டாட்டிக்காரி என்ன சொன்னாலும் தலையாட்டினான்.

அவ, காலால சொன்ன வேலய தலையால செஞ்சாம். புருசக்காரனும் தாம் சொன்னதுக்கெல்லாம் உள்ளா இருக்காங்கான் என்பதால, புருசென வகை வைக்காம இருந்தா.

அவ, தன்னோட அழக வச்சி சீக்கிரமா சம்பாதிச்சி பெரிய பணக்காரியா ஆவனும்னு நினைச்சா. அதுக்கு ஏத்தாப்புல அந்த ஊரு பண்ணயார் மகனும் அவ மேல ஆச வச்சான். அவளும் பண்ணையார் மகன வளைச்சிப் போட்டுக்கிட்டா.

பண்ணையாரு மகனும் அவளுக்கு கண்டும் காணாததுமா காசு, பணத்தவாரிக் கொடுத்தாம். அதனால, அவளும் பண்ணையார் மகனையே தொடுப்பா புடிச்சிக்கிட்டா..

புருசக்காரன கோழி கூப்புடவே, மலங்காட்டுக்கு விறகு வெட்ட போகச் சொல்லிருவா. ஒரு நாளைக்கு நாலு கெட்டு விறகு கொண்டுவான்னு சொன்னா...

அழகான பொண்டாட்டிக்காரி சொல்லிட்டாளேன்னு அந்த

பைத்தியாரப் பெயலும் மாங்கு, மாங்குன்னு மலங்காட்டுக்குப் போயி விறகுக் கட்டுக்களைக் கொண்டாந்து போட்டாம்.

அவ, எல்லா விறகையும் வித்து காசாக்கி கையில வச்சிக்கிட்டா...

புருசங்காரன மலங்காட்டுக்கு, விறகு வெட்டப் போனதும், பண்ணையார் மகன் அவ வீட்டுக்கு வந்திருவாம். அவ, கள்ளப் புருசங்கூட சந்தோசமா இருந்தா.

கள்ளப் புருசனுக்கு தினமும் நல்லா வாய்க்கு ருசியா வித விதமா சமைச்சிப் போட்டு விருந்து வச்சா. ரெட்ட விருந்து!

ஆனா, மலைக்கிப் போயி மாஞ்சி, மாஞ்சி விறகு வெட்டி, குறுக்கு ஒடிய விறகு சுமந்து போடுத கட்டின புருசங்காரனுக்கு, வயித்துக்கு கஞ்சி கூட, அவ குடுக்கது கிடையாது.

சோறு வடிச்ச சுடு தண்ணிய மட்டும் கொடுப்பா. காலையில நீத்தண்ணிய மட்டும் கொடுப்பா. தொட்டுக்க, ஒரு மிளகா வத்தல சுட்டுக் கொடுப்பா.

புருசக்காரப் பெயலும், ஏன் எதுக்குன்னு கேக்காம, அழகான பொண்டாட்டி கையினால நீத்தண்ணி தந்தாலும் அது தான் தேவாமிர்தம்னு நினச்சி குடிச்சாம்.

ஆக, ராவைக்கும், பகலைக்கும், புருச்க்காரனுக்கு, மேப்பாட்டையும் கீப்பாட்டையும் சேர்த்தே பட்டினி போட்டா. ராவைக்கெல்லாம், மழை பெஞ்சாலும், பனியடிச்சாலும், புருசக்காரன் வெளிய ஒட்டுத்திண்ணையில படுக்கப் போட்டுட்டு அவ நல்லாஉள்தாப்பா போட்டு வூட்டுக்குள்ள வசதியா படுத்துக்கிடுவா.

பகலெல்லாம் நாயா அலைஞ்சி விறகு சுமந்த பெயலும் அலுத்துச் சடச்சி, தன்ன மறந்து உறங்கிடுவாம். பகலெல்லாம் கள்ளப் புருசனோட கூத்தடிச்சதால அவளும் தன்ன மறந்து தூங்கிருவா.

பூன கண்ண மூடிக்கிட்டா உலகமே இருண்டு போச்சுன்னு நினைச்சிக்கிடுமா... அது மாதிரி, தான் செய்கிற காரியம் தன் புருசனுக்கு தெரியாதுன்னு நினச்சா...

தண்ணிக்குள்ள காத்துப் போனா வெளிய குமிழி வராமயா இருக்கும்? பொண்டாட்டிக்காரி காரியம் எல்லாம் புருசக்காரனுக்கும் தெரிஞ்சிதான் இருந்திச்சி.

தன்னைத்தான் கிட்ட வரவிட மாட்டங்காளே தவிர பண்ணையார் மகங்கூட கூடிக் குலாவிக்கிட்டுதான்

இருக்காங்கிறதையும் அவனும் தெரிஞ்சிதான் இருந்தான்.

ஆனாலும் அவ கூட சண்டை போட்டா, நொண்டிக் குதிரக்கு சறுக்குனது சாக்குன்னு நம்மள விட்டுட்டு, எவங்கூடயாவது ஓடிப் போயிடுவான்னு நினச்சி, கண்டும் காணாம, கேட்டும் கேக்காம சகிச்சிக்கிட்டு இருந்தாம்.

இப்படியா இருக்கும் போது அந்த நாட்டுல ஒரு ராஜா இருந்தார். அவருக்கு ஒரு அழகான மக இருந்தா. அவளுக்கு கழுத்துக்குக் கீழ ஒரு பெரிய கட்டி வந்து இருந்தது.

நாடிக்கு கீழ ஒரு பெரிய மாம்பழம் தண்டிக்கி, இருந்தது அந்தக் கட்டி, அதனால வலி தாங்க முடியாம ராசா மக, துடியாதுடிச்சா. அது மட்டுமல்லாம, அழகான ராசா மக, அவலட்சணமா வேற ஆயிட்டா.

அரண்மனை வைத்தியர் என்ன என்ன வைத்தியம் எல்லாமோ செஞ்சி பாத்தாரு. ஒண்ணும் பலிக்கலை. அந்த நாட்டுல உள்ள வைத்தியர்கள் எல்லாம் வந்து வைத்தியம் பார்த்தாங்க. கட்டி உடையவே இல்ல.

பார்வை பார்த்தாச்சி. மந்திரிச்சி பார்த்தாச்சி. என்னென்ன உண்டுமோ... எல்லாம் பார்த்தாச்சி. கட்டி மட்டும் உடையுத வழியக் காங்கலை.

கட்டி கண்டத்துல இருந்ததால, அதக் கீறி வைத்தியம் பார்க்கவும் வைத்தியர்கள் எல்லாம் ரொம்ப யோசிச்சாங்க.

கட்டி, கண்டத்துல இருந்தா அது ஒரு பெரிய கண்டம்தான், அன்னந் தண்ணிக் கூட குடிக்க முடியாமா... ராசா மக அவஸ்தப்பட்டா...

கடைசியில, ராஜா, மந்திரியக் கூப்பிட்டு, என்ன செய்யலாம்னு யோசனை கேட்டாரு.

மந்திரி, ராஜா, உங்க மகளோட நோய்க்கு யாரு வைத்தியம் செய்யுதாங்களோ... அவங்களுக்கு ஆயிரம் களஞ்சி பொன் தருகிறோம். வைத்தியம் பார்த்து நோய் குணமாகலைன்னா, கட்டி உடையலைன்னா தலைய வெட்டிருவோம்னு முரசறைஞ்சி அறிவிச்சிருவோம்" என்றான்.

அதக் கேட்ட ராஜாவுக்கு, மந்திரி சொன்னதும் நல்ல யோசனையார்த்தான் பட்டது.

அத மாதிரியே முரசறைஞ்சி அறிவிச்சாங்க, அதக் கேட்டு, எந்த வைத்தியனும் ராசா மகளுக்கு, வைத்தியம் பார்க்க வரலை. வைத்தியம் பலிக்கலைன்னா தலைல்லா போயிரும்.

அதனால வைத்தியம் பார்க்கேன்னு துணிஞ்சி, எவனும் அரண்மனை பக்கம் தல காட்டலை.

விறகு வெட்டியின் அழகான பொண்டாட்டியும் அந்த அறிவிப்பக் கேட்டா... "நம்ம புருசன, அரண்மனைக்கு ராசா மகளுக்கு வைத்தியம் பார்க்கப் போன்னு அனுப்பனும்... அப்படி அனுப்புனா, ஒரு வேள... வைத்தியம் பலிச்சா, நமக்கு ஆயிரம் களஞ்சி பொன் கிடைக்கும். இல்லைன்னா, ராசா, நம்ம புருசனோட தலய வெட்டிருவாம். புருசக்காரன் செத்துப் போனா கள்ளப்புருசங்கூட ரொம்ப சந்தோசமா இருக்கலாம்னு கணக்குப் போட்டா....

மறுநா, புருசக்காரனிடம் விசயத்தச் சொன்னா... அரண்மனைக்கு, ராசா மகளுக்கு வைத்தியம் பார்க்க போங்க. ஆயிரம் களஞ்சிப் பொன் கிடைக்கும். அத வாங்கிட்டு வந்தாத்தான் உங்கள, வீடேத்து வேம்னா...

அதக்கேட்டதும், அவனுக்கு அவளோட எண்ணம் புரிஞ்சி போச்சி. என்றாலும் பெய மறுத்துப் பேசல. மறு வார்த்த பேசல... அழகான பெண்டாட்டி உயிர விடச் சொன்னாலும் உயிர விடவும் தயாரா இருந்தாம்.

சரின்னு சொல்லி அரண்மனையப் பார்த்து விதியென்னு போனாம். போற பாதையில இருந்த வேப்ப மரத்துல ஏறி ஒரு குத்து வேப்பங்கொழைய ஒடிச்சிக்கிட்டாம்.

பலிகிடா கணக்கா, அரண்மனை, போய் சேர்ந்தான். போயி, விபரத்தைச் சொன்னாம். அவனப் பார்த்து எல்லோரும் அதிசயப்பட்டாங்க. உடனே, அவன, ராசா மக, இருந்த இடத்துக்கு அழச்சிக்கிட்டு போனாங்க.

போனவன், ராசா மகளை, ஒரு மணைப் பலகையில உக்காரச் சொல்லிட்டு, அவனும் வேப்பங்குழைய கையில எடுத்துக்கிட்டு, எதுத்தாப்புல உக்காந்தாம்.

கையில இருந்த வேப்பங்குழைய விசிறி விசிறி மந்திரம் சொல்லுறதுக்குப் பதுலா "சாறு குடிச்ச சண்டாளனுக்கே இந்தக்கதின்னா... சக்கை திண்ண பாவிக்கு என்ன கதியோ...?" என்று சொல்லிக்கிட்டே இருந்தாம்.

ராசா, மக, கழுத்துக்கு கீழ, கட்டி இருந்ததால அவளால வாய்திறந்து பேச முடியல. அதனால பக்கத்துல நின்ன தோழிப் பெண்ணிடம் கைக்கர்ணம் காட்டி அவம் என்ன சொல்லுதாம் அதுக்கு என்ன அர்த்தம்னு கேட்டா...

தோழிப் பொண் அதப் புரிஞ்சிக்கிட்டு அவனிடம், இளையராணி, "நீங்க சொல்லுததுக்கு என்ன அர்த்தம்னு கேக்காக..." என்றாள்.

அதக் கேட்டவன் தன்னோட கதையை ஆதியோடந்தமா... சொன்னான். அவம் கதையக் கேட்ட ராசா மகளுக்கு சிரிப்பை அடக்க முடியல... அதனால தன்ன மறந்து சிரிச்சிட்டா...

அப்பிடி தன்னெ மறந்து ராசா மக சிரிச்சதால அவ கட்டி உடைஞ்சிருச்சி... குருவி உக்கார பனம்பழம் விழுந்த கதையா... விறகு வெட்டிக்கு அடிச்சது யோகம்.

ராசா மக அவம் பொண்டாட்டியை கூட்டிக்கிட்டு வரச்சொல்லி, ராசா முன்னால நிப்பாட்டி, விபரத்தை எல்லாம் சொன்னா. உடனே ராஜா அவள சுண்ணாம்புக் களவிலுள்ள வச்சி நீத்தச் சொன்னாரு.

விறகு வெட்டிக்கு ஆயிரம் களஞ்சி பொன் கொடுத்தாங்க. விறகு வெட்டி பெரிய பணக்காரனாயிட்டாம். அதுக்குப் பிறகு அழகுல குறைஞ்ச தனக்கேத்த ஒரு பொண்ணப் பார்த்துக் கட்டிக் கிட்டு சந்தோசமா... இருந்தான்.

## 23

"கல்யாணமான புதுமாப்பிள்ளைக்கும் புதுப் பொண்ணுக்கும் முதநாள் 'ராத்திரி' ங்கறது ஒரு கண்டம்தான்" என்றார். பேச்சியாபிள்ளை. எப்படி என்று கேட்டோம்.

"அவனோட பழக்க வழக்கம் அவளுக்குத் தெரியாது. அவளோட பழக்க வழக்கம்அவனுக்குத் தெரியாது. அதனால முதநா ராத்திரியில 'கலாட்டா' ஆயிருது.

"மலையில் வெளைஞ்ச நார்த்தங்காயவும் கடல்ல விளஞ்ச உப்பயும் சேத்து வச்ச ஒடனே ஊறுகாயி ஆயிருமா. நாலுநாளாவது ரெண்டுங்கெடந்து ஊறவேண்டாமா?

முதல்ல எதவு பிடிபடவே ரெண்டுநா வேணுமெ!"

உள்ளதுதான் என்றோம்.

"நம்ம ஊர்ல ஒரு திருவாத்தன் இருந்தாம்; ரொம்ப நாளைக்கி முன்னெ" என்று ஆரம்பித்தார் கதையை.

"திருவாத்தன் வெள்ளையும் சொள்ளையுமாத்தான் உடுத்தது. காலுக்கு கிரிச்சுமிதியடியும் தலைக்கு லேஞ்சியும் கட்டிக்கிட்டு

பெரிய பண்ணையார் மகங்கெணக்க சோக்கு பண்ணிக்கிட்டு அலைவான். காணாததுக்கு அத்தர் வேற பூசிக்கிடுவாம்.

"பெய குனிஞ்சி நிமுந்து ஒரு வேல பாக்கமாட்டாம். கட்டுன வேட்டியில அழுக்குப் படாம அலைவாம். நாலு மக்க மனுசங்க மாதிரி காடுகரைக்குப் போனம் வேல சோலியப் பாத்தம்னு இல்லாம வி.ருதாப் பெயலா ஊர் சுத்திக்கிட்டு அலைஞ்சாம். உழையாக்கள்ளாளிப் பெயலா பொயிட்டாம்.

"நம்ம புள்ள இப்பிடி சோம்பேறி சோத்துமாடனாப் பொயிட்டனேன்னு தாயி தகப்பன் ரொம்பவே சடப்பட்டாங்க. என்ன என்னவெல்லாமோ சொல்லிப்பாத்தாங்க. பெயல் திருந்தக்காணம்.

"பெயலுக்கு 'ஒரு காலுக்கட்ட' போடுங்க. முதுகுல சொமை ஏறுனாத்தாம் பெய குனிஞ்சி நிமிந்து வேல சோலிய பாப்பாம்ன்னார் ஒருத்தர்.

'செரி; அதையுந்தான் பாப்பமே. வீட்டுக்கு வந்த மகராசி புண்ணியத்துலயாவது திருந்த மாட்டான்னான்னு பெத்தவங்க நெனைச்சாங்க.

உள்ளூருல உழையாக்கள்ளாளிப்பெயலுக்கு எவம் பொண்ணுதருவாம். நாலு ஊரு தள்ளிப் போயி பேசி முடிச்சாங்க.

கலியாணம் ஆச்சி. 'மொதராத்திக்கு' ஏற்பாடு பண்.ணுனாங்க. இவம் என்னபண்ணாம்...

புதுமாப்பிள்ளைக்காரப்பெய, மொதக் காரியமா ஒரு பாட்டிலு அத்தர் வாங்கினாம்! பாதிபாட்டுலு அத்தரை மேலெல்லாம் பூசிக்கிட்டாம். மீதி பாட்டில் அத்தரை புதுப் பெண்டாட்டிக்கினு வச்சிருந்தாம்.

"புதுப் பொண்ணு கொஞ்சம் பயந்த சுபாவம் உள்ளவ. 'சின்னஞ்சிறுசு.. வயசுக்கு வந்தே கொஞ்சநாள்தா ஆயிருக்கு. சரியாக் கனியாத பருவம். மாப்புள்ள வெடிசுட்டியான பய. புதுப்பொண்ணு மலங்க மலங்க முழிச்சிக்கிட்டிருந்தா.

புதுப்பொண்ணுக்கிட்ட வந்து ரெண்டு மூணு கெழவிக ஏட்டி, மொத ராத்திரிக்கு 'அப்பிடி இப்பிடி இருக்கும்; பயந்துறாதெ.. சமாளிச்சிக்கோ. நீயோ அறியாப் பொண்ணு. ஒம் புருசன்காரனோ பெரிய சோக்குப் பேர்வழி. அவசரப்படுவான். நீதான் சமாளிச்சிகிடணும். மொத கொஞ்சம் வலிக்கும். பெறவு போகப் போக சரியாப் போகும். காந்தக்கூட

செய்யும்; அதுக்காக அழுதுராதென்னு பல மாதிரி சொல்லித் தேத்தி அனுப்பிச்சி வச்சாங்க.

"கெழடுக ஆளுக்கொண்ணா சொல்லுதக் கேட்டு புதுப்பொண்ணுக்கு நடுக்கம் வந்துட்டு. வயித்துல புளியக் கரைக்கி!

"புதுப்பொண்ணுக்கிட்ட பால்பழத்தக் கொடுத்து அனுப்புனாங்க. உள்ளெ காலெடுத்து வச்சதுதாம்பாக்கி, பசக்குன்னு தாப்பாப் போட்டான். கட்டுலுக்குக் கூட்டிட்டுப் போனான். பால் பழத்த வாங்கி பெஞ்சுமேலெ வச்சாம். வச்சதும் மொதக்காரியம் அவளைத் தூக்கிக் கட்டுல்ல படுக்கப் போட்டான். அவமேல, மீதியிருந்த அத்தரை பூராத் தெளிச்சாம். ஒரு சொட்டு அத்தர் அவ கண்ணுல விழுந்துட்டு. அம்புட்டுதாம்; கண்ணெக் கரிக்க ஆரம்பிச்சிட்டு. பயந்து போனா. வலி தாங்க முடிய்ல. "அய்யோ அம்மா காந்துதே" ன்னு கூப்பாடுபோட்டா.

"புதுப்பொண்ணெ உள்ளெ அனுப்பிட்டு கதவுக்குப் பக்கத்துல காத்துக்கிடந்த கெழடுகளுக்கு சந்தோசம் தாங்கல! 'இப்பதாம் கதவத் தாப்பாப் போட்டாம்; அதுக்குள்ளெ காந்துதே காந்துதேன்னுட்டு சத்தங்கொடுக்காளெ. பெய ரொம்ப அவசரப்படுதான் போலிக்கெ' ங்கிறா ஒரு கெழவி.

"சிறுசில்லா; சவம் காந்தத்தானே செய்யும்" ன்னு சொல்லிட்டு ஒரு கெழவி உள்ளெப் பாத்து, ஏட்டி காந்தத்தாஞ் செய்யும். பல்லக்கடிச்சித் தாங்கிக்க. பொண்ணாப் பெறந்தவ இதக் கூடத் தாங்காட்டி நாளைக்குப் பிள்ளையப் பெக்குறது எப்பிடி'ன்னா.

"புதுப்பொண்ணு உள்ளெ பலமாக்கூப்பாடு போட ஆரம்பிச்சா. மாப்பிள்ளெக்காரப் பெயலுக்கு என்னெ ஏதுன்னேப் புரியல. 'இப்ப என்ன நடந்துட்டதுன்னு இப்படிப் பேக்கூப்பாடு போடுதெ'ன்னாம்.

"அத்தர் விழுந்த கண்ணெப் பொத்திக்கிட்டு, மறு கண்ணால பாத்து தாப்பாளைத் தொறந்து வெளியே வந்தா. அங்கெ காத்திருந்த கிழடுக 'என்னடி அதுக்குள்ள வந்துட்டே. என்ன ஆச்சி; ஏதாச்சும் சத்தம் போட்டானா'ன்னு கேட்டாங்க.

"ஏங் கண்ணுல்லோ காந்துது ன்னு கூப்பாடு போட்டா. பெறத்தாலயே புதுமாப்பிள்ளக்காரன் வெளியே வந்தாம். கெழடுக அவனெ வளைச்சிக்கிட்டு, என்னவே செஞ்சி தொலைச்சிரு?ன்னு கேட்டாக.

"அதுக்குள்ளெ புதுப்பொண்ணு போட்ட சத்தத்துல அக்கம்பக்கம் படுத்துக்கிடந்த ஆட்களெல்லாம் என்னமோ

ஏதோன்னு ஓடிவந்தாங்க.

"பாட்டிக கிட்ட வெவரம் சொன்னாம்"

"பாட்டி, நா மொதநா ராத்திரியா இருக்கே நல்லா மணக்கட்டுமேன்னுட்டு அவமேல அத்தர் தெளிச்சேன்; அதுல ஒரு சொட்டு எப்படியோ அவகண்ணுல பட்டுட்டு. அம்புட்டுதாம்; அவயம் வக்க ஆரம்பிச்சிட்டா."

"எல்லோருக்கும் ரொம்ப ஏமாத்தமாப் போச்சி." செய், இம்புட்டுதானா சங்கதின்னு சிரிக்க ஆரம்பிச்சிட்டாங்க.

''ஒரு கெழவி சொன்னா; என்ன எழவு அத்தரையுங்கித்தரையும் பூசிக்கிட்டு அலையுதெ. அது இல்லாம உள்ளுக்குப் போக மாட்டேங்கோ; கேக்கென்? மூதி. பொ. போயி ஒழுங்கா பொண்டாட்டிய மேச்சி அடைன்னு வெறட்டினா.

கண்ணெக் கழுவச் சொல்லி, செத்தோடம் இருந்து, சரியானதுக்குப் பெறவு ரெண்டு கழுதெகளையும் உள்ளெ அடைச்சாங்க. "அத்தர் படுத்துனப் பாட்டெப் பாத்தியளா !ன்னு கேட்டுச் சிரிச்சார் பேச்சியாப் பிள்ளை.

## 24

"பைத்தியக்காரப் பய ஆத்தா சொரக்காயப் போட்டுக் கெடந்தாளாம்!

"அந்தக் காலத்தப் பத்திப் பேச்சு வந்தாலே பெரிசுக வாய்க்கு வாய், அது ஒரு பைத்தியக்காரப்பய காலமுங்கெ' இத மாதரி நாகரிகமெல்லாம் அப்ப ஏது' ம்பாங்க.

"அப்டியாப்பட்ட காலத்துல இருந்த ஒரு பைத்தியாரப் பெயலைப் பத்தி சொல்லப் போறோம்" என்று கதையை ஆரம்பித்தார் பேச்சியா பிள்ளை. ரொம்ப காலத்துக்கு முந்தி, ஒரு ஊர்ல ஒரு பண்ணையார் இருந்தார். ஏகப்பட்ட நெலபுலம், அய்வேசு. அவருக்கு ஒத்தைக்கொரு ஆம்புளப் புள்ளதாம் வாரிசு. அதனால புள்ளைய ரொம்பத்தான் செல்லமா வளத்தாங்க.

"பெய பிறவியிலேயே ஒரு ஊப்பை. அதுல செல்லங் கொடுத்து வளத்தா வெளங்குமா. அதுனால பெய விவரக்கட்டையா வளந்தாம். பண்ணையோட மகனா இருந்ததால யாரும் அவனக் கேலி பண்ணல. 'சின்னப் பண்ணெ'ங்கற பேச்சுக்கு மறு பேச்சு இருக்காது.

சின்னப் பண்ணெ வளந்து, இளந்தாரி ஆயிட்டாம். இந்த சமயத்துல பண்ணையாரோட சம்சாரமும் பண்ணையாரும் திடீர்ன்னு காலமாயிட்டாங்க.

இப்பொ இந்த ஏக சொத்துக்கெல்லாம் இவந்தான் 'ராசா'. சொக்காரங்க சொந்தக்காரங்க எல்லாம் கூடி இவனுக்குப் பக்கத்து ஊரு பண்ணையாரு மகளப் பொண்ணுபேசி கட்டிவச்சாங்க. சடங்கு சம்பிரதாயமெல்லாம் முடிஞ்சி பெறவு, சாந்தி முகூர்த்தத்துக்கு ஏற்பாடு பண்ணினாங்க. புதுப்பொண்ணு ரொம்பத்தான் பயந்துக்கிட்டே பால் பழத்தக் கொண்டுக்கிட்டு வெக்கத்தோட, ஏற்பாடு பண்ணியிருக்க வீட்டுக்குள்ள போனா.

போனா பெய, புதுக்கட்டுல்ல கொட்டக்கொட்ட முழிச்சிக்கிட்டு படுத்துக் கெடந்தவன் எந்திரிச்சு உக்காந்தாம். கொண்டுக்கிட்டு வந்த பால் பழத்த சாப்பிட்டாம். நீட்டி நிமிந்து படுத்துக் கொறட்டை விட ஆரம்பிச்சாம்.

"கலியாண வீட்டுல ஓடியாடி வேல செஞ்சிருப்பாரு. அந்த அலுப்புல தூங்கிட்டாரு போலுக்குன்னு புதுப்பொண்ணு நெனச்சி, மனசத் தேத்திக்கிட்டு, கதவச் சாத்தி தாப்பாப் போட்டு ஒரு ஓரமாப் படுத்துக்கிட்டா.

அடுத்தநா ராத்திரிப்பொழுதும் அதே கதெதான் நடந்தது! சொக்கனுக்குச் சட்டி அளவுன்னு நல்ல மூக்கு முட்டத் திங்க, நீட்டி நிமுந்து படுத்துக் கொறட்ட விட, இதுதாம்ம நடந்துக்கிட்டிருந்தது.

பெய கல்யாணம்ன்னா ஏதோ செய்ய வேண்டிய சடங்குன்னு நெனைச்சிட்டாம். பொண்ணு கழுத்துல தாலி கட்டுனதோட காரியம் முடிஞ்சிதுன்னு நெனச்சிட்டாம். கட்டுன பொண்டாட்டியத் தொட்டுக் கூடப் பாக்கல.

பொண்ணுக்கு இப்பொ வெக்கமும் பயமும் இருந்த நெலமெ மாறி, ஏக்கம் வர ஆரம்பிச்சிட்டு.

என்னடா இது; மனுசன் இப்பிடித் தின்னுட்டுத் தின்னுட்டு மண்ணாந்தையாத் தூங்குறாரேன்னு நெனச்சிக் கவலைப்பட்டா.

அப்பிடி இப்பிடியுமா பத்துநாப் பொழுது கழிஞ்சது. பொண்ணாப் பெறந்தவ எத்தனை நாளைக்குத்தாம் பொறுப்பா. ஆம்பளைக்கு ஒரு காமம் ன்னா பொம்பளைக்கு ஏழு காமம்னு சொல்லியிருக்கெ. பதினோராம் நா ராத்திரி, புருசக்காரங்கிட்டப் போயி நெருங்கிப் படுத்தா, அப்பவும் பெய தூங்கீட்டுத்தான் இருந்தானே தவற ஆடல அசங்கல. பைய்ய அவம் மேல கையத்தூக்கிப் போட்டா. அதுலேயும் பயலுக்கு உசுரு வரல.

கொஞ்சங் கழிச்சு, காலத்தூக்கிப் போட்டு அணைச்சா.

"செ. என்ன மூதி ... தூக்கத்துல எடஞ்சல் படுத்துதயே" ன்னு சொல்லி அவ தூக்கிப் போட்டக்காலையும் கையவும் தள்ளிவிட்டுட்டு திரும்பிப் படுத்துக்கிட்டாம்! அவளுக்கு பசக்குன்னு கண்ணுல நீர் கோர்த்துட்டு. இருந்திருந்து நம்ம அப்பனும் ஆத்தாளும் பணத்துக்கு ஆசெப்பட்டு ஒண்ணுந்தெரியாத மண்ணாந்தப் பெயலுக்காக் கட்டிக் கொடுக்கனும்ன்னு நெனைச்சி அழுதா.

மக்யா நாள் காலையில மேலவீட்டுப் பாட்டிட்டே தயங்கித் தயங்கி விபரத்தைச் சொன்னா.

அப்பிடியா சங்கதி. சரி; நா பெயலுக்கு விவரத்தை பக்குவமா சொல்லுதெம்; மக்கா, நீ கவலைப்படாம போன்னு தேத்தி அனுப்புனா. அந்தப் பாட்டி ஒருத்திகிட்டதாம் அவம் கொஞ்சம் நின்னு பதில் சொல்லுவாம்.

அன்னிக்கிப் பொழுதூர தெருவழியாப் போன புதுமாப்பிள்ளைக்காரனைப் பாத்தா கிழவி, 'என்ன பேராண்டி, எப்பிடி இருக்கென்னு விசாரிச்சா.

இருக்கேம் பாட்டின்னாம்.

"பேராண்டி ஓங்கிட்ட ஒரு சங்கதி கேக்கணும் செத்த இப்பிடி வந்து உக்காரு ன்னா. உக்காந்தாம்.

'கலியாணமாயி பத்து நா ஆவுது. இன்னும் புதுப் பொண்டாட்டிய ஏறெடுத்துப் பாக்கலையாமெ. அப்பிடி இருக்கலாமா ஆம்புளப் புள்ளெ?' ன்னு கேட்டா. ஏம் அப்பத்தா ஏறெடுத்துப் பாக்கணும்? ன்னு வெளந்தியாக் கேட்டாம்!

செ. சுத்தப் பைத்தியாரனா இருப்பாம் போலுக்கெ. இவங்கிட்ட இனிமூடி மறைச்சிப்பேசி காரியமாவாதுன்னு, ஏ பைத்தியாரப் புள்ளெ, இப்பிடி விவரக்கட்டையா இருந்தா எப்பிடி. கலியாணமானா, பெண்டாட்டி ஒண்ணுக்கு இருக்கதிலே கொண்டு போயி சக்கரைய வைக்க வேணாமா; இது கூடச் செய்யலைன்னா எப்படி? ன்னு கேட்டா.

அப்பிடியா அப்பத்தா! யாருஞ்சொல்லலையே எங்கிட்டெ. இன்னிக்கே செஞ்சிருதேம்ன்னாம். கிழவிக்கு சந்தோசமாயிட்டு. சரி; போ. இதச் சொல்லத்தான் கூப்பிட்டேம் ன்னு அனுப்பிச்சா.

அன்னைக்கு ராத்திரி இந்த பேவண்ட பய என்ன பண்ணாம்; ஒரு தாள்ள கொஞ்சம் சக்கரைய (வெல்லக் கட்டிய) தயாரா

கொண்டு வந்து வச்சிட்டாம். காலையில அவ எந்திரிச்சி ஒண்ணுக்குப் போன இடத்தில கொண்டுபோயி அந்த சக்கரைய வச்சிட்டு வந்திட்டாம்! தாலி கட்டுறதுபோல இதும் ஒரு சாஸ்திரம் போலுக்கு ன்னு நெனச்சிட்டாம்.

மக்யாநாளும் புதுபொண்ணு போயி, கிழவிகிட்டெ ஆலாதி சொல்லி வருத்தப்பட்டா. நாஞ்சொன்னாக் கேட்டுருவாம்ன்னு சொன்னியே; ஒரு ஈரமண்ணையும் காங்கல' ன்னு.

கிழவிக்கு ஆச்சரியமா இருந்தது. மெய் மறந்து தூங்கிட்டாம் போலுக்கு. 'சரி நீ பொ. இன்னிக்கிப் பாத்து நல்லா தெளிவா சொல்லுதேம்' ன்னா.

காலையில கிழவி கிட்டப் போயி உக்காந்தாம். செஞ்ச காரியத்தச் சொன்னாம், வந்த சிரிப்ப அடக்கிக்கிட்டு, அட கோட்டிக்காரப் புள்ளெ. என்னத்தச் சொன்னோம் நீ இப்படிச் செஞ்சே. நா சொன்னதை நீ மனசுல சரியா வாங்கிக்கிடலையேன்னா.

என்ன அப்பத்தா, நீ சொன்னபடிதானெ செஞ்சேன்; இப்ப இப்படிச் சொல்லுதியேன்னு சிணுங்குனாம். கிழவி பாத்தா பயலுக்கு வயசுதாம் ஒண்ணே முக்கால் கழுத வயசு ஆச்சி. ஆளும் "கழுதமொறடு" போல வளர்ந்திருக்காம். புத்திதாம் வளரல. இவன வச்சிட்டு அவ என்ன செய்வா பாவம். ஊட்டத்தான் முடியும்; திங்கிறது அவம்ல்லா செய்யணும்னு-நெனச்சா.

பேராண்டி நா சொல்லுதத நல்லா மனசுல வாங்கிக்க. சக்கரையக் கொண்டி அவ ஒண்ணுக்கு இருந்துட்டு வந்த இடத்துல வச்சீட்டு வரச் சொல்லல. அவ ஒண்ணுக்கு இருக்கிற அவளோட அந்த இடத்துல (கிழவி வெக்கப்பட்டா இனி கதெ நடக்காதுன்னுட்டு) ஜாடையா கையவும் காட்டி, இதுல வைக்கணும்ன்னா.

பெயலுக்கு வெக்கம் வந்துட்டு!

'பொ அப்பத்தா; நீ என்னமோ சொல்லுத... நா ஒங்கூட பேசமாட்டேம். இப்பிடியெல்லாஞ் சொன்னா' ன்னாம்.

'அட கோட்டிக்கார புள்ளெ. ஒனக்கு நா கெடுதி சொல்லுவனா. இதெல்லாம் செய்றதுதாம்பா. அப்டிச் செஞ்சாத்தாம் பொண்டாட்டி, புருசம்பேர்ல ரொம்பப் பிரியமா' இருப்பா' ன்னா.

'செரி அப்பத்தா' ன்னு போயிட்டாம்.

ஆச்சரியமான ஆச்சரியம் கிழவிக்கு. இப்பிடியும் ஒரு ஆம்பளை இருப்பானா ஒலகத்துலன்னுட்டு.

அவனச் சொல்லவும் குத்தமில்லெ. பிறவியிலேயே அவம் ரொம்ப சுபாவஸ்தன்; அப்புராணியிலும் அப்புராணி. அதனால அவன வீட்டெவிட்டு வெளியில விடாம பொத்திப்பொத்தி வளத்ததுனால வந்த வெனைன்னு நெனச்சி வருத்தப்பட்டுக்கிட்டா கிழவி.

சரீன்னு அவம் போனதுக்குப் பெறவு புதுப்பொண்ணு வந்தா. என்ன பாட்டி என்ன சொல்லுதாரு உங்க பேராண்டின்னு கேட்டா.

கிழவிக்குத் தெரியும். பெரியிடத்துக்காரியம்; கோளாரா நடந்துக்கிட்ணும்னு நெனச்சி, முதநா அவம் நடந்துக்கிட்ட விவரத்த மனசுல வச்சிட்டு,

'யம்மா, ஒனக்குந்தான் சொல்லுதேம். ஆம்பளையில சிலது இப்படி முத, விவரக்கட்டையா இருக்கதுதாம். பொம்பளைக நாமதான் அதுகளை அனுசரணை பண்ணி அதுக்குத்தக்கன நடந்துக்கணும். வெக்கமா இருக்கு அது இதுன்னு நெனைக்கப்படாது. கட்டுனா புருசன் பெண்டாட்டிக்குள்ள இனி என்ன வெக்கம்? ன்னு கேட்டா கிழவி.

அது சரிதாம்ன்னு தலையசைச்சா.

அன்னைக்கிராத்திரி, அவனுக்காக கொஞ்சம் வாக்காவே படுத்திருந்தா; தூங்குத மாதிரி இருந்துக்கிட்டு இவன எதிர்பாத்து கவனிச்சிக்கிட்டே கிடந்தா. அவ நல்லாத் தூங்கீட்டதா நெனைச்சி இவம் செஞ்ச காரியம் மொத விளங்கல! என்னென்னு பாத்தா... வெல்லக்கட்டிய சொருகி வச்சிருக்காம்!!

'சர்தாம்; நெச சக்கரைக்குப் பதிலா பொய் சக்கரைய வச்சிட்டாம். இந்தக் கொடுமய எங்கன போயி சொல்லி ஆத்தன்னு நெனைச்சி, அப்பவும் இப்படியும் ஒரு ஆம்பள இருப்பானா ஒலகத்துலன்னு வெறுத்து தனியாப் போயி பாய விரிச்சிப் படுத்துக்கிட்டா.

மக்யாநா காலையில கிழவிட்டப் போயி நடந்த கதையச் சொன்னா.

கிழவிக்கானா சிரிப்புத்தாங்கல.

'பாட்டி நா எங்க வீட்டுக்குப் போறேம். நீயுமாச்சி ஒம்பேராண்டியுமாச்சி; எப்பிடியும் போங்க' ன்னு கோவிச்சுக்கிட்டு விறுவிறுன்னு போனா.

'யேத்தா யேத்தா அப்டிச் செஞ்சிராத ன்னு நாடியத் தாங்கி நல்ல வார்த்தெ சொல்லி, ஒன்னாணையாச் சொல்லுதேம்; இந்த ஒரு பிழைய பொறுத்துக்க. ரெண்டு நாளைக்குள்ள அவனெ நா சரிக்குக்கொண்டு வந்திருதேம்;

கிழவி அந்த வயசிலும் தினமும் ஆடு மேய்க்கப் போவா. பேராண்டியக்கூப்ட்டா. 'அப்பிடியே ஏங்கூட வாயேம். வீட்டுக்குள்ளே ஏம் அடைஞ்சிக் கிடக்கென்னு. சரீன்னாம். கிழவிக்கு ஒரு 'மொய்' ஆடுக இருந்தது. (இருவது ஆடுகளும் ஒரு கிடாயும்).

அந்தக் காலை நேரத்துல, மொடையடிச்ச ஆடுகளெ கிடா வெறட்டி வெறட்டி பயிராகுது. பேராண்டிக்கு மொத விளங்கல. என்னதுபாட்டின்னு கேட்டாம். 'என்னதுன்னு போயிப்பாரு; கிட்ட இருந்து பாரு' ன்னா. என்னெ முட்ட வராதான்னு கேட்டாம். 'அது அந்த கவனத்துல இருக்கப்பொ ஒன்னெ எங்க பாக்கப் போது. சும்மாப் போயி நில்லுன்னா.

பாத்தாம். கெவனிச்சிப்பாத்தாம். என்னமோ மனசுலாகுதமாரி இருந்தது. என்னமோ பண்ணுனது அவனெ.

பாத்துக்கிட்டே இருந்தவம் 'பாட்டி நா வீட்டுக்கு போவணும்'ன்னாம்!

போ. போயி புத்தியா நடந்துக்க்ன்னு அனுப்புனா.

மக்யாநா காலையில புதுப்பொண்டாட்டி பாட்டியப் பாக்க வரும்போது பணியாரம் கொண்டு வந்தா. தலைகுளிச்சி, தொங்காரமா ஈரத்தோட முடிபோட்டிருந்தா. கெவனிச்சி கிழவி பாக்கவும், வெக்கம் வந்துட்டு பேத்திக்கு!" என்று முடித்தார் பேச்சியா பிள்ளை.

## 25

ஒரு ஊர்ல ஒரு பண்ணையார் இருந்தார்.

அவருக்கு ஒரு பையன். ஒத்தைக்கு ஒரு புள்ளெ, அதனால ரொம்பத்தான் செல்லமா வளத்தாங்க.

குரு குலத்துக்கு பையன அனுப்பி படிக்க வைக்காம, தனியா ஒரு குருவெ அமத்தி சொல்லிக் குடுக்க ஏற்பாடு பண்ணுனாங்க. குருவும் அவனுக்கு எவ்வளவோ பிரயாசைப்பட்டு சொல்லிக் கொடுத்துப் பார்த்தார். பெய

மண்டையில ஒண்ணுமே ஏறல. ஏதாவது ஒரு வேலைய குரு சொன்னா செய்யத் தெரியாது. செஞ்சி காமிச்சாத்தான் அதும்படி செய்யத் தெரியும். சொந்தமா யோசிச்சி செய்யத் தெரியாது.

ஒரு நா, குரு இந்த சிசியப் புள்ளெக்கு-

மண்சட்டியில எப்பிடி விதை போட்டு முளைக்க வைக்கிறதுங்கறதெ சொல்லிக் கொடுத்தார்.

"நல்ல கவனிச்சுக்கோ. நா செய்யிரபடி செய்யணும்"ன்னார். சரின்னு மண்டைய ஆட்டுனாம்.

ஒரே மாதிரியான ரெண்டு மண் சட்டிய எடுத்து, ஒண்ணெ அவங்கிட்ட தந்துட்டு, அளவா மண்ணெப் போட்டு, அதுமேலே எரு போட்டு வெரவினார். இவனும் அதப் பாத்து அதேபடி செய்தான்.

அப்படி செய்திக்கிட்டிருக்கிறப்ப குரு கையில இருந்த சட்டி கை தவறி கீழே விழுந்து உடைஞ்சிட்டது. இவனும் அதேபோல சட்டிய உடைச்சாம்! அப்பபடியாப்பட்ட கூறுகெட்ட மட்டெ..

அவம் செஞ்ச காரியத்தைப் பாத்ததும், பய சரியான விவரக் கட்டையா இருப்பாம் போலுக்கேன்னு நெனைச்சார் குரு. ஒரு நா, பண்ணையார் குருவிடம் வந்து, என்ன குருவே எம்புள்ள எப்படி இருக்காம்னு கேட்டார்.

"அய்யா, ஒம்ம புள்ளைக்கி கிரகம் சரியில்ல. பதினெட்டு வயசு வரைக்கும் இப்படித்தான் இருப்பாம். அதுக்குப் பெறகு சரியாப் போயிரும்ன்னு ஒரு பொய் சொல்லி வெச்சார்.

குரு சொன்னதைக் கேட்டு பண்ணையும் சமாதானப்பட்டுக்கிட்டார். சிசியப்புள்ள ஆளுதா வளந்தானேத் தவிர அறிவு வளரல. வயசு பதினெட்டு கழிஞ்சும் அப்பிடியே தான். "ஊப்பை" யா இருந்தாம். எந்த வேலையானாலும் குரு எப்படிச் செஞ்சு காட்டுதாரோ அப்பிடியேதாம் செய்வாம்.

ஒரு மண்டையிடி காச்ச வந்தாகூட வைத்தியரு வந்து மருந்து குடுத்தாக் குடிக்க மாட்டாம். குரு ஒரு மடக்கு சாப்புட்டா இவனும் சாப்புடுவாம்!

"நீங்க சொன்ன மாதிரி பதினெட்டு வயசுத் தாண்டியாச்சே; பையன் அப்பிடியேத்தானெ இருக்காம்" ன்னு ஒருநா பண்ணயாரு வந்து பாத்து குருவுட்ட சொல்லி வருத்தப்பபட்டாரு.

"பையனுக்கு ஒரு கல்யாணத்தை முடிச்சி வைங்க; எல்லாந்

தானா சரியாப் போயிரும்” ன்னாரு குரு.

சரி; அதையுந்தான் செஞ்சி பாத்துருவம்ன்னு சுமாரான இடத்துல ஒரு பொண்ணப் பாத்து கட்டி வச்சாங்க. முதநா ராத்திரி, பொண்ணு பால்ச் சொம்போட உள்ளே போனா. பய நல்ல குறட்டை விட்டுத் தூங்குதாம்..!

ரா விடிய புதுப்பொண்ணு வச்ச பூ வாடல வதங்கல; கட்டுன சேல கசங்கல.

அவளும் ரெண்டுநா மூணு நா பொறுத்துப் பாத்தா. புருசக்காரன் “பெசிப் பெறக்கி இறுக்க” மாதிரித் தெரியல.

ஒரு வாரம் கழிச்சி, பக்கத்து வீட்டுப் பட்டிக்கிட்டப் போயி தயங்கித் தயங்கி வெக்கத்தோட, “பாட்டி நா நெத்தியில வச்ச குங்குமங்கூட ராத்திரியில கலைய மாட்டேங்கு”ன்னு கண்ணுல நீரும், தொண்டையும் கட்டச் சொன்னா.

பாட்டி புரிஞ்சிக்கிட்டா. அவளப் பக்கத்துல கூப்ட்டு ஆதரவாப் பேசி முதுகு தடவி என்ன நடந்துதுன்னு கேட்டா.

“பாட்டி, அவரு என்ன ஏம்ன்னு கேக்கல; எதுத்து முழிக்கல, தொட்டுத் திறிக்கல” ன்னு சொன்னா. சொல்றப்பவே பொல பொலன்னு கண்ணீரு வடியுது. நெறைவேறாத ஏக்கத்தக் கண்ணீரு விட்டுத்தானே ஆத்தம்னும்ன்னு பாட்டி நெனச்சிக்கிட்டு, புதுப்பெண்ணத் தேத்தி, “சரி, அழுவாதே அவம் ஒரு பைத்தியாரப் பெய. அவனுக்குன்னு ஒருத்தர், வாத்தி இருக்கார். எதும் அவரு சொன்னாத்தான் கேப்பாம். நீ போ; நா அந்தக் “குரு” வப் பாத்து பக்குவமாப் பேசி ஏற்பாடு பண்ணுதேம்ன்னா.

மறுநா, பாட்டி குருவப் போயி பாத்தா. அவரும் வயசானவருதான். அவரத் தனியாப் பாத்து,

என்ன ஒம்ம சிசியப் புள்ள கட்டுன பொண்டாட்டிய தொட்டுக்கூடப் பாக்க மாட்டேங்கானாம்; நீங்களாவது அவனுக்கு சொல்லக்கூடாதான்னா.

அப்பிடியா சங்கதி; அட பைத்தியாரப் பய, அப்பிடியா இருக்காம். நா அவனக் கூப்புட்டு வெவரம் சொல்லுதேம்ன்னார். சாயந்திரமே சிசியனைக் கூப்ட்டு பூடகமா, சாடை மாடையா வெவரங்களைச் சொன்னார். பெயலுக்கு ஒண்ணும் மனசுல ஆகல; மண்ணாந்தையா இருந்தாம். “அப்பிடீன்னா என்ன; நீங்க செஞ்சி காமிங்க அதுபடியே செய்யிறேன்னாம்”!

“இது என்னடா வெக்கங்கெட்ட பொழப்பாப் போச்சி”ன்னு

சிரிப்பும் வருத்தமும் வருது. பெயலுக்கு எப்பிடியும் வெவரத்த தெரிவிக்கணுமே. வெவரமில்லாத சிசியப்புள்ளைக்குன்னு சொல்லித் தர வேண்டியது ஒரு குருவோட கடமைதானேன்னு நெனைச்சி,

"எப்பா, இன்னிக்கு ராத்திரி ஓம் பொண்டாட்டியக் கூப்பிட்டு எம் வீட்டுக்கு வா. உங்க ரெண்டு பேத்துக்கும் விருந்து சோறு போடுதேம்ன்னாரு.

பெயலும், ராத்திரிக்கு பொண்டாட்டியோட குருநாதர் வீடு போய் சேர்ந்தான். ரெண்டு பேத்துக்கும் விருந்துச் சாப்பாடு போட்டாங்க. குருவோட சம்சாரம் தயாரிச்ச சாப்பாடு ரொம்ப நல்லா இருந்தது. ராத்திரிக்கு ரெண்டு பேரும் இங்கேயே தங்குங்கன்னார். சரின்னாங்க.

புதுப்பொண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் மாடியில ஜாகை ஏற்பாடு பண்ணியிருந்தது

பெயலை தனியாக் கூப்ட்டு, கீழே கொண்டு வந்து "இந்த சன்னல் வழியா முதல்ல பாத்துக்கிட்டே இரு. நா என்ன பண்ணுதனோ கவனிச்சிக்கோ; அதுபடி செய்யி"ன்னு சொல்லி நிறுத்திவச்சிட்டுப் போயி, தன்னோட சம்சாரத்த கூடினாரு.

'அட, இம்புட்டுத்தானாக்கும். இது செய்யலாமே. நா என்னமோ ஏதோன்னுல்லா இருந்தேம்'ன்னு நெனச்சிக் காத்துக்கிட்டிருந்தாம்.

குரு எந்திரிச்சி 'கால்' கழுவ வெளியே போனதும் பசக்குன்னு உள்ளே பாஞ்சி போயி குரு சம்சாரத்தெ அதுபடியே செய்ய ஆரம்பிச்சாம்! குருவுக்கேத்த சிசியன்.

வெளியே "கால்" கழுவப் போன குருவுக்கு, "கூ குய்யோ"ன்னு சத்தங்கேட்டு ஓடி வந்து பாத்தா... பெய மல்லுக்கட்டிக்கிட்டுக் கிடக்காம்.

அட்ப்பாவிப் பயலே தொலைச்சுப் போட்டியே; குரு பத்தினியவே கையி வைக்க ஆரம்பிச்சிட்டியேன்னு நெனைச்சி ஒரு சத்தங் கொடுத்தாரு. பெய மெரண்டுட்டாம்.

சொல்லித் தந்தபடியேதானெ செய்தோம்; ஏஞ் சத்தம் போடுதாருன்னு முழிக்காம்.

குருவோட சம்சாரத்துக்கு வந்த சிரிப்ப அடக்க முடியல ; நெனச்சி நெனச்சி அப்பிடிச் சிரிக்கா!

குருவுக்கு ஆத்திரத்த அடக்க முடியல; வந்த ஆத்திரத்துல அவரோட செருப்ப கையில எடுத்து "ஏலேய், ஒனக்கு சொல்லிக்

கொடுத்த ஏம் புத்திய இந்த செருப்பால அடிக்கணும்"ன்னு அவரே அவரு செருப்பால அவரு தலையில ரெண்டு போடுபோட்டுக்கிட்டாரு. அவரோட சம்சாரம் ஓடி வந்து புடிச்சி, "என்னங்க நீங்க...வெத முளைக்க சொல்லிக் கொடுத்த அன்னைக்கி உங்க கை தவறி சட்டி கீழே விழுந்து உடைஞ்சதும் இவனும் தன் கையில இருந்த சட்டிய கீழே போட்டு உடைச்சப்பவே இவனப்பத்தி நீங்க தெரிஞ்சிருக்கணுமே. இப்ப சடைச்சி என்ன புண்ணியம்ன்னு சொன்னா.

இந்த இரைச்சல் சத்தம் எல்லாங்கேட்டு என்னமோ ஏதோன்னு மேலிருந்து ஓடி வந்து பாத்த புதுப்பொண்ணு. இவுக இருக்க "கங்காச்சி"யப் பாக்க முடியல. வெக்கப் பட்டுப் பின் வாங்குனா. குருவோட சம்சாரம் அவளைக் கூப்பிட்டு, "வெக்கப்படுததுக்கு இனி ஒண்ணுமே இல்லே தாயி; சும்மா வா"ன்னு கூப்ட்டு அவளுக்கு ஆதியோட அந்தமா நடந்த கதெ எல்லாத்தையுமே சொன்னா.

"இந்த கூமுட்டைப் பயல ஒண்ணுஞ் செய்ய முடியாது. ஓம் வயித்தில இனி ஒரு பிள்ளப் பிறந்து அது ஒரு வேள நல்லபடியா வந்தாலும் வரலாம். மனசத் தேத்திக்க. இப்படி வா"ன்னு அவளக் கூப்ட்டு, அவரைக் கூப்ட்டு, "இந்தாங்க, இனி யோசிச்சி ஒரு புண்ணியமில்ல. இவளவச்சே அவனுக்கு சொல்லிக் குடுங்க"ன்னா.

இவ்வளவு நடந்ததுக்குப் பெறகு இனி என்ன செய்யன்னு புதுப்பொண்ணும் சம்மதிச்சா. அவனுக்கும் "பட்டத்துக்கு" ஒரு புள்ளெ வேணுமெ.

எப்பிடியோ; எல்லாம் ஒரு ஒழுங்குக்கு வந்தது மா...திரி இந்த ஒலகத்துக்குத் தெரிஞ்சது.

●

# கி. ராஜநாராயணன் நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | கோபல்லபுரத்து மக்கள் (இரண்டாம் பதிப்பு)<br>(1991 ஆம் ஆண்டிற்கான<br>சாகித்ய அகாதமி பரிசு பெற்ற நாவல்) | 35 - 00 |
| 2. | கோபல்ல கிராமம் | 20 - 00 |
| 3. | கதவு | 15 - 00 |
| 4. | வேட்டி | 16 - 00 |
| 5. | அப்பாபிள்ளை அம்மாபிள்ளை | 12 - 00 |
| 6. | கொத்தைப் பருத்தி | 16 - 00 |
| 7. | கிடைகுறுநாவலும் பன்னிரண்டு சிறுகதைகளும் | 25 - 00 |
| 8. | பிஞ்சுகள் | 11 - 00 |
| 9. | கரிசல் கதைகள் | 35 - 00 |
| 10. | கரிசல் காட்டுக் கடுதாசி (இரண்டு பாகமும்) | 50 - 00 |
| 11. | மாந்தருள் ஒரு அன்னப்பறவை | 8 - 00 |
| 12. | கு.அழகிரிசாமி கடிதங்கள் | 15 - 00 |
| 13. | ராஜநாராயணீயம் (விமர்சனக் கட்டுரைகள்) | 12 - 00 |
| 14. | மக்கள் தமிழ் வாழ்க | 12 - 00 |
| 15. | தமிழ் நாட்டு கிரமியக் கதைகள் | 12 - 00 |
| 16. | நாட்டுப்புறக் கதைகள் I | 20 - 00 |
| 17. | நாட்டுப்புறக் கதைகள் II | 20 - 00 |
| 18. | தாத்தா சொன்ன கதைகள் | 35 - 00 |
| 19. | நாட்டுப்புறக் கதைகள்-ஒரு பன்முகப் பார்வை | 25 - 00 |
| 20. | புதுவை வட்டார நாட்டுப்புறக் கதைகள் | 60 - 00 |
| 21. | வயது வந்தவர்களுக்கு மட்டும்<br>(நீலக்குயில் வெளியீடு) | 40 - 00 |
| 22. | பெண்மணம் | 30 - 00 |

தொடர்பு கொள்க

**அன்னம் (பி) லிட்**

2, சிவன் கோயில் தெற்குத் தெரு.

சிவகங்கை - 623 560

## இந்நூல் கிடைக்குமிடங்கள்

அன்னம் (பி) லிட்
2, சிவன் கோயில் தெற்குத் தெரு,
சிவகங்கை - 623 560.

திலீப்குமார்
25, III டிரஸ்ட் கிராஸ் தெரு,
மந்தைவெளி, சென்னை - 28

திருமகள் நிலையம்
55, வெங்கட் நாராயணா சாலை
தி.நகர், சென்னை - 17

ஹிக்கின் பாதம்ஸ்
அண்ணா சாலை
சென்னை - 2

விஜயா பதிப்பகம்
20, ராஜவீதி
கோயம்புத்தூர் - 1.

வள்ளலார் புத்தக நிலையம்
266 - A. செர்ரி ரோடு
சேலம் - 1

பாலியல் கதைகள் எல்லா மொழியிலும் இருக்கு. அதை திரட்டுவ தாலும், வெளியிடுவதாலும் நம் ஆச்சாரம் போய்விடும் என்று அரற்றுவது பேதமை. மானுடவியலில் இதெல்லாம் இருக்கு. மனு ஷன் எங்கெல்லாம் இருக்கானோ அங்கெல்லாம் மனுஷநாத்தம் இருக்கும். இல்லாததை நான் சொல்லவில்லை. இவை மக்களி டையே உள்ள கதைகள். ராஜநாராயணன் உண்டாக்கிய கதைகள் அல்ல. அதை அவ்வளவையும் சேகரிக்கணும்.

ஆபாசம் என்பதை ஒரு வாதத்திற்கு வைத்துக் கொண்டால்கூட இதைத் தெரிந்து கொள்வதால் ஒருவன் கெட்டுவிடுவான் என்று சொல்ல முடியுமா? நான் சின்ன வயதில் இதுபோல் எவ்வளவோ கதைகள் வண்டி வண்டியா கேட்டிருக்கேன். பாலியல் சம்பந்த மான விஷயஞானம் கிடைத்திருக்கிறதே தவிர, கெட்டுப்போய் விடுவோம் என்பதல்ல.

பாலியல் கதைகள் அத்தனை விஷயங்களையும் படித்துப் பார்த் தால் அதன் காலகட்டம் கி.மு. - கி.பி. என்பதுபோல - நம் சமூகத் தில் திருமணம் என்ற மரபு வருவதற்கு முன்னால் - திருமணத்திற் குப் பின்னால் என்று கொள்ள வேண்டும். மானுட வளர்ச்சியில் ஒரு கட்டத்தில்தான் திருமணம் வருகிறது. ஒவ்வொரு வசவுகளுக் குப் பின்னாலும் ஒரு கதை இருக்கு. இப்போது இந்த வசவுகளைத் திரட்டிக் கொண்டிருக்கிறேன். விஷயம் தெரியாதவன் சொல் வான், இந்த கி.ரா.வுக்கு கிறுக்கா? வசவுகளைத் திரட்டிக்கிட்டு அலையறான் என்று நையாண்டி செய்வான்.

நான் கதை எழுதுவதை தள்ளி வைத்துவிட்டு, இதைச் செய்ய யாருமில்லாததால் செய்கிறேன்.

— கி.ரா.